உ

ஸ்ரீசற்குருவேநம:

# வேதாந்தசாரம்.

கோவிந்ததிரசுவாமிகள்,
சிஷியராகிய
சந்திரசேகரசுவாமிகளால்
தமிழில்மொழிபெயர்க்கப்பட்டது

இஃது
சேலஞ்ஜில்லாசிவில்கோர்ட்டுவக்கீல்
மா-ா-ா-ஸ்ரீ
அப்பாசுவாமிப்பிள்ளையவர்களாலும்
பாலக்காட்டுச்சேரி
சுல்த்தான்பேட்டையிலிருக்கும்
மா-ா-ா- அருணாசலம்பிள்ளைகுமாரர்
சிவராமன்பிள்ளையவர்களாலும்

பாரிப்பாக்கம்
மூலியப்பமுதலியாரது
மெய்ஞ்ஞானவிளக்கவச்சுக்கூடத்தில்
பதித்தது

1862.





ஸ்ரீ சற்குருவே நமா.

# வேதாந்தசாரம்.

தெய்வவணக்கம்.

## சுலோகம்.

அகண்டசச்சிதானந்தம அவாங்மானசகோசரம் ❋
ஆத்மானமகிலாதாரம் ஆச்ரயேபீஷ்டசித்தயே... ❋

ஸ்ரீ அகண்டசச்சிதானந்த பரிபூரணமாகியும் அவாங்மனுகோசரமாகியும் சமஸ்தத்துக்கு மாதாரமாகியு மிருக்கிற வாத்மாவைச்சர்வாபீஷ்டசித்தியின் பொருட்டு ஆசிரயித்து அனேகவேர்டிப்பிரமாண்டங்களையு மூதரத்தில் வைத்திருக்கிற பெருத்தவயிறுடைத்தான விக்கினேஸ்வரருடைய பாதபதுமங்களையணங்கி, பரமார்த்தமாயும் அத்துவிதானந்த ஸ்வரூபமாயும் அத்வைதத்தைக் கடந்தவராயும் ஆத்மார்த்த மாயும் சிவசொரூபமாயுமிருக்கிற ஸ்ரீ குருமூர்த்திகளுக்கு நமஸ்காரஞ்செய்து, சகலவேதாந்தசாத்திரங்களிலுநிச்சயிக்கப்பட்டசித்தாந்தசாரங்களை யெல்லாஞ்சங்கிரகித்து இதைப்பார்க்கிற தற்குயோக்கியமுள்ள மூடர்களுக்கு அனாயாசமாய்ச் சுடஞானம் பொருந்தும்பொருட்டுச்சொல்லப்படுகிறது. மேலும் இந்தச்சாத்திரமானது மூலசாத்திரார்த்தங்களை யனுசரித்திருப்பதாலந்தமூலசாத்திரத்திற் சொன்ன அனுபந்த சதுஷ்டயங்களைச்சொல்லுகிறோம்.

### அனுபந்தசதுஷ்டயம்.

வினா- அவ்வனுபந்தசதுஷ்டயமாவதேதெனின்,

விடை- அதிகாரி, விடயம், சம்பந்தம்பிரயோசனமென்று நான்குவிதமாயிருக்குமிந்த நான்குஞ்சாத்திரார்த்தபலத்துக்குப்பலம்.

வினா- அதெப்படியெனின்,

விடை- இந்தச்சாத்திரத்தின் பொருட்டுப்பிரவிர்த்திச் சபுருடனுக்குப்பல லட்சணமாயிருக்கிறதே பிரயோசனம், அந்தப்பிரயோசனமில்லாதவிடத்தில் மூடனுக்குக்கூடப்பிரவிர்த்தியில்லை.

வினா- ஆனாலிந்தச்சாத்திரத்திற்கு அதிகாரிகளாரெனின்,

விடை- சாதனசதுஷ்டய சம்பத்தியுள்ளவனுமாய் புத்திசாமர்த்தியமுள்ளவனுமாய் வித்துவானுமாய் மேதாவியுமாயிருக்கிறபுருடனேயதிகாரியென்று சொல்லப்படும்.

வினா- விடயமாவதேதெனின்,

விடை- யாதொரு சொரூபத்தினிடத்தில் சகலவேதாந்த அர்த்தங்களுங் கூடியிருக்கிறதோ அந்தவேதாந்த அர்த்தங்களின் சீவப்பிரமைக்கிய சொரூபமாயிருக்கிற சுத்தசைதன்னியமே விடயமென்பது.

வினா- சம்பந்தமாவதேதெனின்,

விடை- இப்போது சீவப்பிரமைக்கியமான வஸ்துவைப் பிரமாணமாய்ச் சொல்லுகிற சாத்திரத்திற்குப் போதகபோத்தியலட்சணமாவதே சம்பந்தமென்று சற்புருடர்களாற் சொல்லப்படும்.

வினா- பிரயோசனமாவதேதெனின்,

விடை- பிரத்தியகான்மாவும் பிரமமுமைக்கியானுபவமானதே யானந்தம், அவ்வானந்தானுபவத்தினால் சகலசமுசாரபந்தத்தை யொழிக்கிறதே பிரயோசனமென்பது, இப்படியநுபந்தசதுட்டயஞ் சொல்லப்பட்டதில் யாதொரு புத்திசாலியாயிருக்கிறபுருடனுக்குச் சாதனசதுட்டய சம்பத்தி பொருந்தியிருக்கிறதோ அவனுக்கேயிப்போது சொல்லப்பட்டபிரயோசனஞ் சித்திக்கும், இதிலொன்று குறைந்தாலும் பலனில்லை யென்றும். இந்த அர்த்தத்தில் மகாரிஷிகளானவர்களும் சாதனமானது நான்குவிதமாயிருக்குமென்றுஞ் சொல்லியிருக்கிறார்கள். ஆகையாலந் நான்கு சாதனமும் பொருந்தினவனுக்கே முத்தி, அவற்றுள் ஒன்று குறைந்தாலு முத்தியில்லை,

சாதனசதுஷ்டயம்.

வினா- சாதனசதுஷ்டயமாவதேதெனின்,

விடை, நித்தியாநித்தியவஸ்துவிவேகமுதற்சாதனமென்றும், இகமுத்திரார்த்தபலபோகவிராகமிரண்டாஞ் சாதனமென்றும், சமாதிசட்கசம்பத்தி மூன்றாஞ் சாதனமென்றும், முமூட்சத்துவம் நாலாஞ்சாதனமென்றுஞ் சாத்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றது.

## முதற்சாதனம்.

வினா- நித்தியாநித்தியவஸ்துவிவேகமாவதேதெனின்,

விடை- பிரமமே நித்தியம் அநித்தியமாயிருக்கப்பட்டதேகேந்திரியாதிசகலசெகத்துமநித்தியமென்றறிவது.

வினா- இதற்குத்திருஷ்டாந்தமெப்படியெனின்,

விடை- பிருத்திவையானது காலத்திரயத்திலு மண்ணாய்க் காண்கிற படியினால் நித்தியமென்றும் அதின் காரியமானகடாதிகளழிந்து போகின்றபடியினால் அநித்தியமென்றுங்கண்டாற்போலத்தோன்றுகிறதேகாதிசெகத்தெல்லாம் பிரமத்தின் காரியமான படியினால் அநித்தியமென்றும் இவ்வநித்தியமான செகத்துக்குப் பிரமங்காரணமானதால் கடத்துக்கு மண்ணெப்படி நித்தியமோ அப்படிபிரமமேநித்தியமென்றுஞ் சொல்லப்படும்.

வினா- ஆனலிந்ததேகாதிசெகத்துப்பிரமத்தின்காரியமென்பதற்குப்பிரமாணமேதெனின்,

விடை- ஆத்மாவிலேநின்று மாயாசாதிபஞ்சபூதசெகத்துண்டானதென்று யெசுர்வேதோப நிஷத்திலேவருணன்பிருகுவுக்குச்சொல்லியிருக்கிறார் ஆதலால் செகத்துப்பிரமத்தின் காரியமானபடியினால் அநித்திய மென்பதிற்சந்தேகமில்லை மேலும் சகல செகத்துஞ்சாவயவமானபடியினா லநித்தியமென்று சகலத்திராருங் கண்டிருப்பதால் வைகுண்டாதிகளை நித்தியமென்றெண்ணியிருப்பது மூடர்களுடையபுத்திப்பிரமையே யொழியவேறில்லை, ஆகையால் நித்தியாநித்தியங்களிரண்டையுஞ்சுருதியினாலும் யுக்தியினாலும் பகுத்தறிகிறதே நித்தியாநித்தியவஸ்துவிவேகமென்று சொல்லப்படும்.

## இரண்டாஞ்சாதனம்.

வினா- இகாமுத்திரார்த்தபலபோக விராகமாவதேதெனின்,

விடை- இகலோகபரலோக போகங்களிரண்டுமநித்தியங்கண்டிருப்பதாலதுகளில் துச்சபுத்திசெய்து வெறுப்பது.

வினா- அதெப்படியெனின்,

விடை- புருடனாயிருக்கிறவனுக்குநித்தியாநித்தியபதார்த்தவிவேகத்தினால் புஷ்பசந்தனவனிதாதிகளான அநித்தியவத்துக்களாயிருக்கிற சகலவிடயங்களிடத்திலும்வயிராக்கியமுடனேயுண்டாகுமென்றறி.

வினு- அதெப்படியெனின்,

விடை- காக்கையெச்சமாதிகளிலெவ்வருக்குமசங்கிதபுத்தியெப்படி தோற்றுமோ அப்படியேவிடயபோக்கியங்களிலும் அசங்கிதபுத்திபுண்டாம் ஆனதாலிதுவே தீவிர விரத்தி யென்று சொல்லப்படும்.

வினு- தீவிரவிரத்திக்கடையாளமேதெனின்,

விடை- போகபோக்கியங்களில் தோஷ திருஷ்டியாய்ப்பார்க்கிறதே யடையாளமென்று பெரியவர்களாற் சொல்லப்பட்டிருக்கின்றது ஆதலாலவனுக்குத்தான் பிரவிர்த்திக்கிற காரியங்களில் தோஷங்கண்டபிறகுந் திரும்பவும் பிரவிர்த்தியாகாது ஆகையால் இகபரலோகங்களிலிருக்கிறபதார்த்தங்களின் உண்மையை நன்றாய்விசாரிக்கவே வேணும் எந்தவஸ்துவினுடையகுணத்தை நிச்சயம்பண்ணி விசாரித்தறிகிறபோது அந்தவஸ்துவினிடத்திலிருக்கிறதோஷங்காணப்படும்.

வினு- ஆனால் அந்தத் தீவிரவிரத்தியையடையப்படுவதெப்படியெனின்,

விடை- மாதாவினுடைய வுதரத்தின்மலமூத்திரமத்தியிலிருந்து விடக்கிருமிகளாற்கடிக்கப்பட்டு மூலாக்கினியினால் தகிக்கப்பட்டதும் விசாரிக்கிறவனெவன்தான் வைராக்கியத்தையடையான் — தாயார் கெற்பம் விட்டுநீத்தும் தன்னுடல் மலமூத்திரங்களிலே யீதந்து மல்லாக்கச்சயனித்தும் பசிறி விழுகிறதும் பாலக்கிரகங்களினாற் பிடிக்கப்படுகிறதுமான குழந்தைப்பருவங்களை விசாரித்தவனெவன்தான் வைராக்கியத்தையடையான் — இதல்லாமல் பந்துக்களாலும்பிறத்தியாராலுமடிபட்டுக்கொண்டு மஞ்ஞானபாவமாகவுமதிகசஞ்சலமாகவும்அசத்துக்கிரியைகள் செய்துக்கொண்டுமிருக்கிறகௌமாரபருவத்தை விசாரித்தவனெவன்தான் விரத்தியையடையான் — மதத்தினாலுன்மத்தனாகவும் பெரியவர்களை நிந்தித்துக்கொண்டுங்காமாதுரனாகவும் வேளைதப்பினவேளையில் ஸ்திரீகளுடனனுபோகிக்கிற துன்மார்க்கனாகவும்பொருந்தினயௌவனத்தை விசாரித்தவனெவன்தான்விரத்தியடையான் — ரூபகீனமுஞ் சர்வாவமானமுஞ் சர்வத்திலுந் தீனத்துவமும் புத்திக்குறைச்சலுமாயிருக்கிறமூப்பில் தன்னை வந்தடுத்ததுர்த்திசைகளை விசாரித்தவனெவன்தான் விரத்தியடையான் — வாதபித்தசுரங்குன்மலயம் சூலைசேஷ்மமுதலான ரோகங்களினாற் பிறந்ததீவிரதுக்கமும் சரீரத்திற்கேற்

தூமனை சொந்தமில்லாமலிடைவிடாதிருக்கிறதவேப்புமா
கி, அதைப்பையவிசாரித்தவனெவன்தான் விரத்தியடையான்—
சிலத்தூலம் தேடிக்கிறபோது எமனைக்கண்டாற்போலிருக்
கிறபயமும் மரணமானாலுண்டான நடுக்கமும் உணர்ந்துகொள்ளு
ம்விடுகிறபோது கேஷ்பத்தில் தட்டுப்பட்டமேனை பொ
ருந்திய பிராணைப் பிரயாணகாலத்திற் காண்பிக்கிற துக்கத்
தை விசாரித்தவனெவன்தான் விரத்தியடையான்—சகலது
த்துவங்களும் பொடுங்கி இந்திரியங்கள் பறைறப்பட்டு அந்தக்க
ரணை விருத்தியழிந்து அஞ்ஞானாந்தகாரத்திலமிழ்ந்திச்சுழ
லுகின்ற மரணமேனையிலுண்டாகும் மயக்கத்தனை விசாரித்
தவனெவன்தான் விரத்தியடையான்—பிராணன் பிரிந்த
போது நெருப்பாற்றிலுந் தகிக்கப்படாநின்ற பாதையிலு
ம் கொடிய பாபமான நரகத்திலுமசிபத்திரவனத்திலும் யமதூ
தர்களால் தண்டிக்கப்பட்ட யாதனைகளைவிசாரித்தவனெ
வன்தான் விரத்தியடையான்—அப்பாபுண்ணியமடைந்தவ
ர்கள் பரலோகமாகிய சுவர்க்கத்தில் நக்ஷத்திரரூபமாக
விருந்து அந்தப்புண்ணியக்ஷயமானவுடனே தேவதைகளி
னாலுதள்ளப்பட்டுத்தேகங்கள்சிதறிப்பூமியில்விழுகிறதைக்க
ண்டு விசாரித்தவனெவன் தான் விரத்தியடையான்—வாயுவ
க்கினி சூரியனிந்திரன் முதலாகிய தேவதைகளும் சுவரா
க்குமயத்திலுமலக்கமுள்ள மனதோடு கூடினவர்களாய்
சத்துருபட்சங்களிலகப்படுகிறதுக்கத்தைவிசாரித்தவனெ
வன்தான் விரத்தியடையான்—பிரமதேவன் முதல் சக்கிரவ
ர்த்திகள் பரியந்தமுமிருக்கிறவானந்ததாரதம்மியங்களும்
சுருதியினால் சொல்லப்பட்டிருக்கிற வுபாதிசனான தாலிது
வாஸ்தவமல்லவென்று ஆலோசித்தவனெவன்தான் விரத்திய
டையான்—சாலோகசாமீப சாரூபமுதலாகிய பேதங்கள்
புண்ணிய கன்மவசத்தினாலுண்டானதாயிருக்கின்றத்தினா
ல் கிடைத்த சாலோகாதிகளுக்கும் நித்தியத்துவங்கூடாதெ
ன்று விசாரித்தவனெவன் தான் விரத்தியடையான்—யா
தொருலோகத்திலேற்றக் குறைச்சலான தாரதம்மியமிரு
ந்தாலும் இகலோககதிகளில் துக்கமெப்படிபோலப்ப
டியே அந்தப்பரலோககதிகளிலும் துக்கமுண்டென்று வி
சாரித்தவனெவன்தான் விரத்தியடையான்—உலகத்தில் வி
ஷேசங்களாயிருக்கிற புருஷருள் தசிக்கப்பட்ட தடாகங்களா
யிருக்கிறதுகளை நன்றாயிடைவிடாமலனித்திய மாய்ப்பா

வினா- அதெப்படியெனின்,

விடை- யமனானவன் சத்துருவாயிருந்துக் கொண்டே பாபங்களைச் சோதித்து நன்மையைக் கொடுக்கிறான் காமன் பிரியனாயிருந்துக் கொண்டு அனர்த்தத்தைக் கொடுக்கிறான் — அதிலுமெமனானவன் சத்துருக்களுக்குத் துன்பத்தைக் கொடுத்துப் புண்ணியபுருஷர்களுக்குச் சுகத்தைக் கொடுக்கிறான் காமனானவன் சற்புருஷர்களுக்கும் விவேகமில்லாதவர்களுக்குங் கூடப் பிரியனாயிருந்துக் கொண்டு நல் மார்க்கத்தைக் கெடுக்கிறான் ஆதலால் சத்துருவாயிருக்கிறவனைக் கெடுக்கிறதற்குக் கேட்கவேண்டியதில்லை — பிரமாவானவர் தானே பிரபஞ்சவிருத்தியைக் கோரிச் சிருஷ்டி விருத்தியாகக் காமனையுண்டாக்கினார் அந்தக் காமனால் உலகமோகிக்கப்பட்டுச் சந்திரனைக்கண்டகடலானதெப்படிப்பொங்குமோவப்படியே சகலலோகங்களும் பிரவிர்த்தியாகின்றது — செகத்தைப் பிரமிக்கச்செய்கிற காமனென்பவன் ஸ்திரீபுருஷர்களுடைய மனதிற் குடியாயிருந்துக் கொண்டு சராசரங்களெல்லாவற்றையுஞ் செய்வித்து அன்னியோன்னியமோகமுண்டாக்கிக் காமாந்தகாரத்தினால் ஒருவர்க்கொருவராசையாகிறகயிற்றினாற் கட்டிப் பிரபஞ்சத்தை விருத்தியடையப்பண்ணிப் பிரமதேவனுக்கினையைத் திசப்படுத்துகிறான் — ஆதலால் சகலசெந்துக்களுடைய மனதிலுங்குடியாயிருக்கிற காமவேகத்தினால் போகத்தினிடத்தில் சதாவாசையாலதுசித்தமாயிருக்கின்றது அப்படியில்லைவிட்டால் அறியாதபதார்த்தங்களில் லப்படி ஒருவன் பிரவிர்த்திக்கப்போகிறான் — சகலசெந்துக்களுக்குமாசையே பலவந்தமாகையால் வித்தத்தேகமரித்தாலுமாசையானதுகுறைகிறதில்லை — ஆதலால் விவேகிகளுக்குள் விடயங்களிடத்தில் தோஷமென்றுகண்டு அதிலபூர்த்தினபுத்தியையும் விட்டுக் காமபாசத்தில் நின்றுளவன் விடப்படுகிறானோ அவனே முத்திமார்க்கத்திற் கூடுவான்.

வினா- ஆனால் சற்புருஷர்களுக்குக் காமனைச்செயிக்கிற சுலபமாகிய வுபாயமெங்ஙனமெனின்,

விடை- நினைப்பாகிறசங்கற்பத்தை விடுகிறதே சுலபமான வுபாயம் — அப்பா இதல்லாமலும் கேட்கப்பட்டுங் காணப்பட்டுமிருக்கிற சந்தபோக்கியவஸ்துவினிடத்திலும் நன்மையென்கிற புத்தியை விட்டால் காமப்பிரவிர்த்தியில்லை — காமனுக்குவித்து சங்கற்பமத்தச் சங்கற்பத்தினாற் சகலப்பிரவிர்த்தி

தியுமுண்டாகும் ஆகலால்வித்தைக்கெடுத்தால் முளையெப்படி யில்லையோ அப்படியே சங்கற்பநாசத்தினால் காமனும் நாசமா வான் மனிதனானவன் போகபோக்கியங்களிடத்தில் நல்லதென்கி றபுத்தியினாற்பிரவிர்த்திப்பதேதவிரவொருத்தனுடைய ஏவலினாலே பிரவிர்த்திப்பான் ஆகலால் காமனைச்செயிக்கவேணுமென்கிற விச்சையுள்ளவன் விஷயங்களிடத்தில் நல்லதென்கிறபுத்தியை த்தவிரவேணும்.

வினா- சங்கற்பம்பிறவாதிருக்கிறதற்குக்காரணமேதெனின்,

விடை- விஷயத்தினுண்மையையெதார்த்தமாய்க் காணுகிறது மனதையனர்த்தமாயெண்ணுகிறதுமான விரண்டினாலுங் கா மப்பிரவிர்த்திக்கவகாசமில்லை.

வினா- அதெப்படியெனின்,

விடை- மாணிக்கத்தினிடத்தில் கல்லாய்ப்பார்த்தவனுக்குப் ப யந்தோன்றாது அதுநன்மையென்கிறபுத்தியுமில்லை அதை க்கிரகிக்கவேணுமென்கிறபுத்தியுமில்லை—ஆகையால் ஒருவ ஸ்துவினுண்மையை யெதார்த்தமாய்ப் பார்க்கிறது மனர்த்த மாயெண்ணுகிறதுமே சங்கற்பரூபமாயிருக்கிற காமன்பிர விர்த்தியாதிருக்கிற வுபாயமென்று சொல்லப்படும்.

வினா- இனிதனலட்சணமாவதேதெனின்,

விடை- அது, பாபங்களுக்கெல்லாமிருப்பிடமாகவுஞ்சதாகாலமு ந்தூக்கத்தைத்தவிர்ப்பிக்கிறதாகவும் பயமுங்கெர்வத்தைக்கொ டுக்கிறதாகவும்பந்துக்களுடைய பகைமையைப்பண்ணு கிறதாகவும் சற்குணத்தைக் கெடுக்கிறதாகவும் லோபிகளு டைய சித்தத்தினால் வணங்குவதாகவும் முத்தியைத்தடைக்கெ டுக்கிறதாகவுமந்தக் கரணத்துக்குமலினத்தைக்கொடுக்கிறதாகவு மிருக்கும்—அதல்லாமல் ராசாக்களால்பயமுஞ் சோரர்களால் பயமும் அசதிமறதியினால்பயமுந்தாயாதிகளால் பயமுமா யிருக்கிறதனமானது, பயத்தினால் மூழ்கியவர்களுக்கெ ல்லாமூல மாயிருக்கிறபடியினால் சற்புருஷர்களுக்குச் சுகங் கொடுக்கமாட்டாது.

வினா- அதெப்படியெனின்,

விடை- தனத்தைச்சம்பாதிக்கிறதிலும் ரட்சிக்கிறதிலும் தான

ட்டினத்திலுங்கள்ளர்சஞ்சரிக்கிற விடத்திலுமனுஷர் கூடி யிருக்கிறவிடத்திலு மனுஷரில்லாத விடத்திலுந் தரித்திரம டைந்தவன் சௌஸ்தமாய் சகலஜனங்களாலு மாதரிக்கப்பட் டுச்சுகமாயிருப்பன் தனமுள்ளவன் சதாகாலமே பொருந்தின பு த்திரோடேதான் பெற்றபிள்ளையினிடத்திலும் பயப்பட்டுச்சு தாகிலேசத்தையடைவன்—ஆதலால் தனமானது அனந்தான ர்த்தத்துக்கிருப்பிடமாகையாலிந்த அர்த்தத்திலே பிரதிகூலமே தவிரப்புருஷார்த்த சித்தியேயில்லை யென்றுசாதுக்களானபே ர்கள் அர்த்தத்தைவிட்டொழித்தவனையே மேலாய்விடுவார்கள்— இதுவுமல்லாமல் பத்திவிசுவாசகுணம் பொருந்தினகிரிகை யு டனே பெரியோர்களுக்குஞ் சம்மதியாய் நடக்கிற புத்திரனை யுந்தானத்துக்கும் போகத்துக்குமனுகூலமாயிருக்கி றதனத்தையும் லட்சுமிகடாட்சம பொருந்தின கிரகத்தையும் சற்புருஷர்களாயிருக்கின்றபேர்கள் சுருதியினாலும் அநுபவத் தினாலுமநித்தியமென்றெண்ணி விட்டொழிவார்கள்—அஞ் ஞானிகளாயிருக்கிறபேர்கள் நித்தியமென்றெண்ணி மோகமா கிற சமுத்திரத்திலழுந்திப்போவார்களென்பது—யாதொ ருவர்மலக்கூட்டமாயிருக்கிற கிரகத்தினால் சுகமென்றெண்ணி மலத்திலிருக்கிறபுழுக்களைப்போல க்ஷேத்திரபாத்திரவாசையி னால் அதைத்தேவதாசரீரம்போலெண்ணிவாழ்ந்துக் கொண்டி ருக்கிறார்களோ அவர்களுக் கொருக்காலு மோட்சமென்கிற சொல்காதிலுங் கேட்கக்கிடையாது திரும்பவுங் கெற்பவாசா தி துக்கங்களைக்கொடுக்கும்—எவர்கள் தாரபுத்திர தனங்களிலி ருக்கிற வாசையைநிராசையா யொழிக்கிறார்களோ வவர்களுக் கு மோட்சவிச்சாபமானது சித்திக்குமென் றியிதானுக்கில்லை— ஆதலாலீஸ்வரார்ப்பண புண்ணியகன்மங்களினால் பாவங்களை யத்தியந்தம் போக்கடிக்கிறவர்களாயும் வேதத்திற்சொன்ன அ ர்த்தத்தினிடத்திற் பிரவிருத்திக்கிறவர்களாயும் சித்தசுத்தியுள் ளபேராயும் புத்திசாலிகளாயும் நித்தியாநித்திய பதார்த்தசோ தனையையன் புடனே யடிக்கடிசெய்துக் கொண்டிருப்பதினாலுண் டாகிற மகா வயிராக்கியமென்கிறவாளைப் பொருந்தினவர்க ளாயும் மோட்சமொன்றே வேணுமென்கிற அபேட்சையோடு கூடினவர்களாயுமிருக்கிற சந்நியாசிகளுக்குச் சமஸ்த விஷ யங்களிலும் படர்ந்திருக்கிறஆசையாகிற கொடியை யறுக்கி றதுசுலபம்—மேலும், பெலமாயிராநின்ற இந்தச் சமுசார விருத்தியுவான கோட்டைக்குப் பெரிதாகியவாசல் கள்மூன் றுண்டு.

வினா- அதேதெனின்,

விடை- காந்தையென்றுங் கனகமென்றுஞ் சிங்கனையென்று ஞ்சொல்லப்பட்ட இந்தவாசல்களை யெவனடைக்கிறானோ அவனுக்குயிருத்திரபயமில்லை—மோட்சலட்சுமி நகரத்துக்கு வொருத்தராலும் பிரவேசிக்கப்படாதபடிக்கிருக்கிற மூல்வாசல் ஒன்றுண்டு அந்தவாசலானது, அனேஸ்திரீயென்கிற விரண்டு கதவினால் மூடப்பட்டுக் காமமென்கிற தாழ்ப்பூட்டியிருக்கும், யாதாமொருதீரனாயிருக்கிறவனிந்த மூன்றையும் பிளந்தெறிந்து போகிறானோ அவன்மோட்ச லட்சுமியுடை யசுகபோகத்தை யனுபவிக்கிறதற்கு யோக்கியனாவான்—ஆகையால் விவேகமாகிறபரியின் மேலேறிக்கொண்டு தீவிரவைராக்கியமாகிறவாளைத்தரித்துக் கொண்டுசிநேகிதனாகி சுகதுக்கலாபநட்டங்கள் வந்தாலுஞ் சமமாய்ப்பொறுத்துக் கொண்டிருக்கிற உபசாந்தனுக்குச் சத்துருவானவனில்லை—விவேகத்தினுண்டான தீவிரவைராக்கியத்தாலே மோட்சத்துக்கு நிலைக்கடையென்று சற்புருஷாள்சொல்லியிருக்கிறார்களாகையால் மோட்சம் வேணுமென்று இச்சித்த புருஷனானவன் மேலான தீவிர வைராக்கி யத்தைப் பிரயத்தனம் பண்ணியாகிலுஞ் சம்பாதிக்க வேணும்—யாதொரு புருஷனானவன் வைராக்கியமில்லா திருக்கிறானோ அவன் தேகாதிபந்தங்களைவிட்டொழிய மாட்டான் ஆதலால் வைராக்கிய மானது பந்தங்களை யறுக்கிறதற்கு வொருவாளா யிருக்கும்—யமாலயம் போலிருக்கிற வீட்டில் மகா பெரியவர்களாகவிருந்தாலும வைராக்கியமில்லாதபடியினால் தாபத்திரயங்களா லடைந்தகல் பட்டுக்கிலேசிப்பார்களாகையால் பிரயத்தனம் பண்ணியாகிலும் இந்தத்தீவிர விரத்தியைச் சம்பாதிக்கவேணுமென்றறி,

## மூன்றுஞ்சாதனம்.

வினா- இனிசமாதி சட்கசம்பத்தியாவதேதெனின்.

விடை- சமம், தமம், உபரதி, திதிட்சை, சிரத்தை, சமாதானமாகியவாறும்சமாதிசட்கசம்பத்தியென்றுசொல்லப்படும்.

வினா- இதில் சமமாவதேதெனின்,

விடை- மனதுக்குத்தன்னுட்டத்தி லொருமைப்பாடா யிடைவிடாமல் நிலைத்திருப்பதேசமமென்று சொல்லப்படும்—மேலும், இந்தச்சமமானது, உத்தமசாந்தியென்றும் மத்திமசாந்தியென்றும் அதமசாந்தியென்றுமூன்றுவிதமாயிருக்குமெனப் பெரியோர்கள்சொல்லுவார்கள்.

வினா- இதிலுத்தமசாந்தியாவதேதெனின்,

விடை- மனமானது விஷயத்தையொழிந்து லட்சியவஸ்துமாத்திரமாய் நிலைத்திருப்பதே பிரமநிஷ்டையென லட்சணையாகவுத்தமசாந்தியென்றுஞ்சொல்லப்படும்.

வினா- மத்திமசாந்தியாவதேதெனின்,

விடை- பிரத்தியேகான்மசொரூப வடையாளத்தைச் சதாவநுசந்தானம்பண்ணுகிறதே சத்துவலட்சணமான மத்திமசாந்தியென்றுஞ்சொல்லப்படும்.

வினா- அதமசாந்தியாவதேதெனின்,

விடை- விஷயவியாபாரத்தை விட்டுச் சிரவணமனனாதிகளைச் செய்துக்கொண்டிருக்கிற சேமமின சத்துவ லட்சணமான அதமசாந்தியென்றுசொல்லப்படும்—இப்படிப்பட்ட சமமானதற்கு முன்னங்கமென்றும் பின்னங்கமென்றுமிரண்டங்களுமுண்டு அவ்விரண்டங்களும் பொருந்தினாலிந்தச்சமமானது சித்திக்கும்இல்லாதிருந்தால் சித்தியாது.

வினா- அவையேதெனின்,

விடை- தீவிரவைராக்கியமே முன்னங்கமென்றும் சீவசாருண்ணியமுதலானதுகளே பின்னங்கமென்றுஞ்சொல்லப்படும்— ஆயினும், இந்தச்சமமானது, காமக்குரோதலோபமோகமதமாச்சரியங்களாகிறவராசத்துருக்களையுமென்றுசெயிக்கப்படவில்லையோ அவனுக்குச்சித்தியாது, சத்தாதிவிஷயங்களைவிடம்போலெண்ணித் தீவிரமோட்சவிச்சையிலிருப்பிப்பாரிருக்கிறவனெவனோ அவனுக்குச்சித்தியாது—எவனால் குருவீசுவரனையாராதிக்கப்படவில்லையோ எவனுக்குக்குருகடாட்சமில்லையோ எவனுடைய சித்தம் நின்மலமாகவில்லையோ அவனுக்குச்சித்தியாது, ஆகையால்மனது நிருமலமாகும் பொருட்டுப் பெரியவர்களாற் சமாதானஞ் சொல்லியிருக்கிறபடியிந்தச்சமமானது சித்தித்தால்மனது நிருமலமாகும் சித்தியாவிட்டால் நிருமலமாகாது—பிரமசரியமும் அயிம்சையும் தயவும் வைக்கமும் விஷயாசத்தியம் அஹங்காரமும்டம்பமும் அசத்தியமும மதையுமில்லாதிருக்கிறதுந் தயிரியமும் தேகாபிமானமுமில்லாதிருக்கிறதும் ஈஸ்வரதியானம்பண்ணுகிறதும் பிரமவித்துக்க

னுடன் சாவகாசம்பண்ணுகிறதும் ஞானசாஸ்திரார்த்தங்களை அ
நுசமட்பாடாய் விசாரிக்கிறதும் சுகதுக்கங்களைச் சமமாய்பா
ர்க்கிறதும் ஏகாந்தவிருத்தியாயிருக்கிறதும் மோக்ஷவிச்
சையுமாகியவிதுமுதலானதுகள் எவனுக்குண்டாயிருக்குமோ
அவனுடைய சித்தம் நிருமலமாகும்—எவனுக்காகிலு மிந்நில்
லாமல்பலனேற்றியில் சுழன்றால் அவனுடைய சித்தம் நிருமலமாகமாட்
டாது—மேலும், ஸ்திரீகளை நினைக்கிறதும் பார்க்கிறதுமவர்
களுடைய குணாதர்மங்களைக் கவனிக்கிறது மவர்களை நன்மை
யென் றெண்ணுகிறது மவர்களிடத்திற் பிரியமவர்களிடத்
தில்வசனிக்கிறது மவர்களுடைய கூட்டுறவுமவர்களைக்கலக்கி
றதுமாகிய இந்த வெட்டுவிதமைதுன மென்றும் அதற்கு
விலக்ஷணமிருத்தல் நிருமலமான பிரமசரியமென்றுஞ் சொல்லப்
படும்—ஆகையால், மகுருவாக்கியங்களிற் றுயிர்களோட்டீடி
யாமலிருப்பதும் பூதயவுந் திரிகரணசுத்தியாய் சதாவனை
க்கமும் அயிசுவரிய தபசுரூபகுலவர்க்கஞ்ஸிரமாதி களினாலு
கங்காரம் பிரவிர்த்தியாத படிக்கபிமானத்தை விட்டொழிக்கிற
தும் குரு வேதாந்தவாக்கியார்த்தங்களின் திடநிச்சயமும் எவ
னுக்கிருக்குமோ அவனுக்குமனசு நிருமலமாகுமென்றறி.

வினா— இனி—தமமாவதேதெனின்,

விடை— பிரமசரியாதிதர்மங்களில் சித்தமேகாக்கிரமாயிரு
ந்து சத்தாதி விஷயங்களிலிந்திரியங்கள் செல்லாதபடி நிறு
த்துகிறதே தமமென்று சொல்லப்படும்—மேலும், இந்தி
ரியங்களுடைய பிரவிருத்திவிஷயங்களிற் செல்லாமல் நிறு
த்துகிறதே சித்தசாந்திக்குச்சாதனமான தமமென்றும் யாகி
களாற்சொல்லப்பட்டிருக்கிறது.

வினா— அதேதெனின்,

விடை— இந்திரியங்கள் விஷயங்களிற் செல்லும்போது மன
மவைகளுக்கு அதீனமாய்ப் போகுமாகையாலிந்திரிய நிக்
கிரகம்பண்ணினால் மனம் வெளியிலே போகிறவேகமொடுங்கி
ச்சாந்தியபரவசத்தையடைந்துமே நிருமலமுண்டாகும்—
ஆதலால் மனப்பிரசாதத்துக் கடையாளமிந்திரியங்களை விஷ
யங்களிற் செல்லாதபடி நிறுத்துகிறது, அப்படி நிறுத்தின
ல் மனதுக்குப் பாகியார்த்தபோகங்களொழியும் அப்போது
சித்தமானது தன்னுடைய மலினபாவங்களொழிந்து மெள்ள
மெள்ளச்சாந்தியையடையுமாகையால் சித்தத்தினுடைய பா

க்ஷயார்த்தபோகங்களை விட்டொழிகிறதே மோட்சமென்று மோட்சலட்சணத்தை யறிந்தபெரியோர்கள் சொல்லுவார்கள் ஆகலால்— முமூட்சுக்களுக்குமனோ நிர்மலமாகிறதற்குச்சுலபமான இந்த யமத்தைத் தவிரவேறொன்றில்லை மேலும் இந்த யமத்தினால் மனசுக்கு நிச்சலமும் நிர்மலமு முண்டாகுமாதலாலிந்தப் பிராணாயாமத்துக்குத்திக்குத் தேசகாலமிது முதலான நியமமும்வேண்டியபடியினால் பத்திமானாயிருக்கிற வனிதுகளெல்லாமதுக்கு விரோதமென் றெண்ணிச் சித்தசாந்தியடைகிறதின்பொருட்டுச்சோம்பலில்லாமல் இந்தத்தமத்தையே அப்பியாசிக்கவேணும்— இந்தத்தமாப்பியாசத்தால் சகலவிந்திரியங்களுடைய போக்கைநிறுத்துகிறதினாலும்போகபோக்கியங்களைத்தோஷ திருஷ்டியாய்ப் பார்க்கிறதினாலு மீசுவரப்பிரசாதத்தினாலுங் குருப்பிரசாதத்தினாலுங் கொஞ்சகாலத்தில் சித்தசாந்தியடையும்.

வினா· இனி-தீட்சையாவதேதெனின்,

விடை— பிராரத்தகன்மவேகத்தினால் ஆதியாத்மீகமாதிபௌதிகமாதி தெய்வீகமாகிற தாபத்திரயாதிதுக்கங்கள் தன்னைவந்தடைந்தாலுமதுகளை மனமையல் பொறுக்கிறதே தீட்சையென்றுசொல்லப்படும்— முமூட்சுக்களுக்குத்தீட்சைக்குச் சமானமானவங்கமொட்சைவேறொன்றில்லை ஆகையால் தீரபுருஷர்களாகவிருக்கிறபேர் களித்தத்தீட்சையைக்கவசமாகத்தரித்துக்கொண்டு சகல விக்கினங்களையுந்திரணீ கரித்து மாயையைச்செயிப்பார்கள்— இந்தத்தீட்சையுள்ள பேர்களுக்கே யோகசித்தியுமோட்சசாம்பிராச்சியலட்சுமீகபோக சித்தியுமுண்டு, எப்படிப்பட்டவர்களும் தீட்சையில்லாத வராயின் விக்கினங்களால் அடிபட்டு மரத்தில் நின்றஇலைகளானது பிரசண்டவாயுவினாலெப்படி பூமியில் விழுந்து போகுமோ அப்படியே ஞானத்தினமாகிவிடுவார்கள் தீட்சையுள்ளவன் தபசியக்ஞயத்தீர்த்தம் விரதம் கேள்விஐசுவரியம் சொர்க்கமோட்ச முதலானதுகளில் ஏதுகளை யிச்சித்தானோ அதுகளையடைவான்— இதுவன்றியும்— பிரமசரியம்அயிம்ஸை சசாதுக்களைப் பூசித்தல் பிறர்தூஷிக்கிறத்தைப் பொறுத்தலாகியவிவைகளெல்லாந்தீட்சையுண்டானவனுக்கே சித்திக்கும்— இந்தத்தீட்சையானது, சகல சாதனங்களிலு முத்தமசாதனமாகையால் எந்தத்தாபத்திரயாதிவிக்கினங்களானதுமிதனால் நிவாரணமாகும்— ஆதலால்தனக்குவருகிற துக்கங்களை தீட்சையி

னால் பொறுத்துக்கொண்டு சத்தியானுசாரமாய் மௌனமௌனி ளச் சிரவணாதிகளைப்பிரயத்தனம் பண்ணவேணும்.

வினா- அப்படிப்பிரயத்தனம்பண்ணித் நிஷ்டையை சாதித்ததற் குப்பிரயோசனமேதெனின்,

விடை- பிராரத்தகன்மவேகத்தினால் அனேகவர்த்தமானங்களை ப்பொறுக்கிறதே பிரயோசனம்.

வினா- இனி உபரதியாவதேதெனின்,

விடை- சித்தசுத்திக்குச் சாதனங்களாய்க்கண்ட நித்தியனைமித்தி யாதிசகலகன்மங்களையும் வைராக்கியமென்கிற விதியினால்விட் டொழிகிறதே சந்நியாசமென்றும் உபாயமென்றுஞ் சம்பிரு தாயத்துக்குச் சம்மதமாய்ச் சொல்லப்படும்— மேலும் உபரதி யென்கிற சந்நியாசமாவது—சகலகன்மத்தியாகம்பண்ணுகிற தற்கேயானதாலிதுவே கன்மசந்நியாசமென்றுசொல்லப்ப டும்— வேதத்திலுஞ் சகல கன்மத்தியாகமே சந்நியாசமென் று சொல்லப்பட்டிருக்கின்றது இதுவன்றியுங்கன்மங்களினா ற்சாதிக்கப்பட்டலோகாதிகளுக்கும்வேதங்களினால் அனித் தியத்துவங்கேட்டிருப்பதால் நித்தியபலத்தையிச்சிக்கி றபரமார்த்தனுக்குஇப்படியழிந்து போகிக்கிறகன்மங்களினாற் பிரயோசனமேதிருக்கின்றது,மேலுங்கன்மத்தினாற்சாதிக்கப்ப ட்டபலம்உற்பாத்தியமென்றும்ஆர்ப்பியமென்றுஞ் சமஸ்காரி யமென்றும்விகாரியமென்றும்நான்குவிதமாயிருக்கும்இவையல்லாமல்வி டவேறில்லை நித்தியமாயிருக்கிறபிரமத்துக்கு இந்நான்குங்கூ டாது.

வினா- அதெப்படியெனின்,

விடை- சதசித்தமாயும் சர்வதாதாரனைடந்தாயும் நிஷ்களமா யும்நிஷ்கிரியமாயு மிருக்கப்பட்ட பிரமத்தையு மன்றி யனொருவஸ்துவு மில்லையென்று வேதத்தில் நிஷேதிக்கப் படுகிறதுஆகையால் பிரமமுற்பாத்திய மாகமாட்டாது-யா தொருபோகத்தையடைகிறவனுக்கு மந்தப்போகத்துக்கும் பேதமுண்டானுலப்போது அடையப்படுகிறவனுக் போகமை டையப்படும் அப்படி பேதமில்லாமல் சர்வதாயத்தனையடை ந்திருக்கிறபிரமத்துக்கொருக்காலுமார்ப்பியங்கூடாது--மேலு ம் உலகத்தில் மலினமாயிருக்கிற கண்ணாடிமுதலானதுகளுக்கு த்துலக்குவிக்கிறதான சமஸ்காரியம் வேணும் அப்படியில்லா

மஹாகாசம்போல் நித்திய சுத்தமாயிருக்கிறபிரமத்துக்கொரு ரூத்காரியரூபமில்லை—இது அவ்வியப் நிஷ்களமாயும் நிஷ்கிரியமாயுமிருக்கிற பிரமத்துக்கு எந்தத் தோஷிக்கப்படுகிற தி, சன்னதுபடிருதலான ஜலத்தோப்போல உருவமிருந்தா லிதுவன டாமையினைப் போக்கச் சருத்காரியம் வேணும்—அல்லாமலின்றி வேதத்தில் கேவலமென்றும் நிர்க்குணமென்றும் பிரமத்தைச் சொல்லியிருப்பதால் அப்படி நிர்க்குணமாயிருக்கிற பிரமத்துக்குச்சருத்காரியப்போல் நாமரூபத்தையுஞ் சொல்லக்கூடாது—மேலும், லோகத்தில் சாவயவமாயிருக்கிற பல வஸ்துக்களுக்குப் பரிணாமாதி விகாரங்களுண்டானதுபோல நிஷ்களமாயிருக்கிறபிரமம்விகாரியமாகப்பட்டாது.

வினா- அதேதெனின்,

விடை- சுருதியானது நிஷ்களம் நிஷ்கிரியம்சாந்தம் நிரஞ்சனமென்று வஸ்துவினுடைய தத்துவத்தை யுள்ளபடி சொல்லுகிறது—ஆகலால்கர்மத்தினால் சாதிக்கப்பட்ட உற்பாத்தியவிகாரங்கள்பிரமத்துக்கொருக்காலுஞ்சொல்லக்கூடாது.

வினா- பிரமம்கன்மத்தினால்தான்சாதிக்கப்பட்டதோவெனின்,

விடை- கன்மம், அசத்தியம்- பிரமம்அனாதி நித்தியமாகையால் கன்மத்தினாற்சாதிக்கப்படுகிறதல்ல.

வினா- கன்மசாத்தியமானதை அசத்தியமென்கிற தெப்படியெனின்,

விடை-கன்மத்தினாலுண்டுபண்ணப்பட்டிருக்கிறதேகாதிப்பிரபஞ்சம் இகத்திலேயப்படி யழிந்துபோகுமோ அப்படியே புண்ணிய கன்மத்தினாற்சம்பாதிக்கப்பட்ட பரலோகங்களானது அழிந்துபோகும் சகலருக்குஞ்செய்யப்படுகிற கிருத்தியங்களழிந்து போகுமென்கிற எது ஜாக்கிரதையாய்த் தோற்றிக்கொண்டிருக்கின்றது ஆகையால் கன்மசாத்தியமானசொர்க்காதி லோகங்களை வித்துவானாயிருக்கிறவன் நித்தியமென்று மோகப்படான்—மேலும் ஜகத்காரணமான பிரமம் நித்தியமென்கிறது சகலருக்குஞ்சம்மதம் சுருதியிலுமிந்தப் பிரமந்தானே ஜகத்காரணமென்றும் சொல்லுகிறது, அதிலுஞ் சாமவேதோபநிஷத்தானது, சகலமும்பிரமமென்றுஞ்சத்தியமென்றுஞ்சொல்லி அந்தப்பிரமத்துக்குத்தானே நித்தியத்துவமுஞ்

செகத்காரணத்துவரூந்திரமாய்ச் சொல்லுகின்றது. ஆகையால் நித்யமேசர்வநித்தியமென்கிறதிற்சந்தேகமில்லை, மேலும் வேதவாக்கியமானது கன்மத்தினாலும் புத்திரனாலும் தனத்தினாலும் மோட்சம்வரமாட்டாதென்று கன்மாதிகளைப்பிரத்தியட்சமாய்நிஷேதிக்கின்றது — ஆகலால் எவனொருவன் பிரத்தியகான்மாவாவது பிரமமேதென்று சதாவிசாரித்துச் சகலகன்மமுந் நிஷேதம் பண்ணுகிறானோ அவனுக்குப்பரப்பிரமலட்சணமான கைவல்லியஞ்சித்திக்கும் அதுதவிரக் கெங்காஸ்நானங்களினாலுந்தீர்த்தங்களினாலுஞ் செபங்களினாலுஞ் சாந்திராயண முதலான தபசுகளினாலும் அசுவமேதாதியெக்கியங்களினாலும் ருக்குவேதாதிகளினாலும் பிரமத்தையடையமாட்டானென்பது நிச்சயம் — ஞானத்தினால் மோட்சமென்றுஞ் சகல கன்மங்களையு நிஷேதித்து ஞானமே மோட்சமென்றுஞ் சுருதியிற் சொல்லுகின்றது — அப்பா, விவேகியாகவும் விரத்தனாகவும் பிரமமே நித்தியமென்றறிந்தவனாகவும் பிரமந்தானாகவேணு மென்கிற இச்சையுடைத்தாயிருக்கிறவனாகவுமிருக்கின்ற புருஷனுக்கு அநித்தியமாயிருக்கிற கன்மசாமக்கிரியங்களில் பிரீதிவரமாட்டாது — ஆகலால் அநித்தியமான சொர்க்காதிசாதனங்களாய்ச் சொல்லப்பட்டிருக்கிற நித்திய நைமித்திகாதி சகல கன்மசாதனங்களையும் பிரமபதமடையவேணுமென்கிற முமூட்சுவானவன் நன்றாய் விட்டொழியவேணும்.

வினா- முமூட்சுவானவனுக்குச்சாதனங்களேதெனின்,

விடை- இரண்டுகையுடையவனுக்கு எப்படிதன்னுடன் சகல காரியமுஞ் சாதிக்கப்படுமோ அப்படிபோலக்கிரமமுநிகளே சாதனம், மேலும், தீபமானதைத் தூண்டிக்கொடுத்தாலெப்படி பிரகாசமாமோவப்படியே சிரவணத்தினால் ஞானமும் பிரகாசிக்கும் மோட்சத்துக்குச்சாதனம் ஞானமென்று பிரமவித்துக்கள் சொல்லியிருப்பதால் ஞானத்தைநச்சித்தமாயப்பியாசம் பண்ணவேணும் — அப்பா விசிதமாய்ப் பண்ணவேண்டிய கன்மங்களைமுமூட்சுவானவர்க ளெப்படிவிடப்படுமென்று மூடாளைப்போல் நீயுஞ்சங்கை பண்ணவேண்டாம்.

வினா- அதெப்படியெனின்,

விடை- கன்மத்தினுடையபலம் வேறு ஞானத்தினுடைய பலம்வேறு கன்மசாமக்கிரியம் வேறு ஞானசாமக்கிரியம் வேறு

கன்மாதிகாரிவேறு ஞானாதிகாரிவேறென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

வி-ரு- அதெப்படியெனின்,

விடை-ஆசையுடன் கூடினவன் கன்மாதிகாரி, நிராசையுடன்கூடினவன் ஞானாதிகாரி, அயிசுவரியவானாகவுஞ் சாமர்த்தியவானாகவுமிருக்கிறது கன்மாதிகாரியினுடைய லட்சணம், சிரவணாதிகளைப் பொருந்தினவனாயிருக்கிறது ஞானாதிகாரிலட்சணம் — மோட்சத்துக்கதிகாரி இகமுத்திரார்த்த பலபோகத்திலே பாசையில்லாத ஞானியாகிய சந்நியாசி, கன்மங் கருக்கதிகாரி கிரகமாகிய வீட்டுடையவன் — கன்மிக்குச் சாதனம் ஸ்திரீ யெக்கியபாத்திரங்கள், ஞானிக்குச்சாதனம் குரு சிரவணத்தைத் தவிரவேறு சாதனமில்லை — கன்மத்தினால் திரளாய் மேன்மேலும் அகங்காரம் விருத்தியடையும் ஞானமான சிரவணத்தினாலடிக்கடியகங்காரமழிந்துபோம் — கன்மசாத்திரமானது பிரவிருத்தியைக் கொடுக்கும்இதையனுட்டிக்கிறவதிகாரிகளுக்குமொன்றுக் கொன்று பின்னமாயிருக்கும் — கன்மிக்கும் ஞானிக்கு மொருத்தருக்கொருத்தர் கூட்டுறவுமில்லை, கன்மிக்குச் சாமக்கிரியம்புறம், ஞானிக்குச்சாமக்கிரியம் அகம், ஞானம் உயர்ந்த கெதியைக்கொடுக்கும், கன்மம் அதோகெதியைக் கொடுக்கும், அப்படிப்பட்ட ஞானகன்மங்களிரண்டையுமொன்றையொன்றுஎப்படியபேட்சித்திருக்கும் ஒன்றிலேயொன்றுஎப்படிக்கூடியிருக்கும் அக்கினிக்குந்திரணத்துக்குமிருட்டுக்கும்பிரகாசத்துக்கு மெப்படியொன்றுதல் கூடாதோ அப்படியே ஞானகன்மங்களுக்கு மொன்றுதல் கூடாது, ஒன்றுக்கொன்று சத்துருக்களானதால் ஒன்றுக்கொன்று எப்படியதிகமாயிருக்கும் ஆனதையால் ஞானத்தின் சந்நிதானவிசேஷத்தினால் கன்மமானது மறைந்துபோம், கன்மத்தினால் ஞானமறைபடமாட்டாது.

வி-ரு- அதெப்படியெனின்,

விடை-அநேகமாயிரங்கோடி விறகுகட்டுபோட்டெரித்தஅக்கினிஜ்வாலையானதும் சூரியபகவானுக்கெவ்வள வாகிலுமறைப்பாகிறஉபகாரம்பண்ணமாட்டாதெப்படியோ அப்படியேலட்சசகஸ்ரகோடிகன்மங்கூடியும் ஞானத்தைமறைக்கமாட்டாது, அந்தக்கன்மங்களும் — ஞானத்துக்குள்ளே யொடுங்கிப்போம் ஒருபுருடனிடத்திலாசிரயித்துக்கொண்டிருக்கிறவிரண்டுவகைகளுங்கூடித்தொழிற்செய்யும் அதுபோல்ஞானக்

தைவிரும்பின முமூட்சுவுக்குக் கன்மங்கள் தேவையில்லை— யாதொருவனுக்கு மோட்ச விச்சையினு லெப்போது தீவிரவைராக்கிய முண்டாகுமோ அப்போதே கன்மசந்நியாசம் பண்ணுகிறது கடாவம்— ஆகையால் புத்திமான்களிதே பிரமாணமென்று நிச்சயிக்கவேண்டும்.

வினா. அதெப்படியெனின்,

விடை— அபமோட்சஞானத்துக்குக் கன்ம சாதனங்கள் தேவையில்லையென்றுவேதங்களால் நிஷேதிக்கப்படுகிறது. கீதையிலும் ஸ்ரீ கிருஷ்ணபகவான் கூடத்தரானவர் வேதத்திலும் நடயினுலும் காணப்படுகிற வசல்லொன்றுசொல்லியிருக்கிறார்— மேலும், சுருதியில்பிரவிருத்தியென்றும், நிவிர்த்தியென்றுமிரண்டு விதஞ்சொல்லியிருக்கின்றது, அதில்பிரவிருத்தியினால் மனுஷனுக்குப் பெந்தமும் நிவிர்த்தியினால் மோட்சமுமாகையால் மோட்சத்தைவிரும்பினவர்கள் கன்மசந்நியாசம் பண்ணவேணுமே தவிர ஞானகன்மங்களிரண்டையுமொன்றாய்க் கூட்டுகிறது ஒருக்காலுங் கூடாது ஆகையால் ஞானம் வேணுமென்கிறவன் சகல கன்மங்களையும் விடவேணும் யாதொருவன் கன்மங்களைச்சாதனமென்றும்இட்டமென்றுங்கிரகித்தானோ அவன் அந்தவஸ்துக்களழிந்துபோமென்றுநன்றாய்த் தெரிந்தபோதிலுமே நாசப்படுவான்—உபராஞ்சத்தார்த்தமான துறவன்கண்டயா தொருவிடயவஸ்துக்களையும் விட்டொழிகிறதாகையால் அந்த உபரதிமுக்கியமென்றும்கௌணமென்றும் தொழிலினாலிரண்டுவிதமாகும்.

வினா- அதேதெனின்,

விடை— விருத்திக்குத்திரிசியமான விஷயங்களைப்பரித்தியாகம் பண்ணுகிறதே முக்கியோபரதியென்றும்வேதாங்கங்களாயிருக்கிற கன்மங்களை விடுகிறதே கௌணோபரதி யென்றுஞ் சொல்லப்படும்.

வினா- அதேதெனின்,

விடை— யாதொருபுருஷனும் பிரதானமான உபரதி சித்தியார்த்தமாகும் பொருட்டுவேதாங்கமான கன்மங்களைச் சந்நியாசம் பண்ணவேணும் அந்தக்கன்மசந்நியாசமான அங்கஹீனமானுல் பிரதான உபரதிசித்திக்க மாட்டாது— ஆதலால் இ

முத்திரார்த்த பலபோகங்களில் நன்றாய் விரத்தி வந்தவுடன் கன்மசந்நியாசம் பண்ணவேணும் அப்படியே வைராக்கியமில்லாமல் கன்மசந்நியாசம் எவன் பண்ணுகிறானோ அவனுக்குச் சண்டாளனாயிருக்கிறவ னிடத்தில் வேதமந்திரங்க ளுபதேசித்தாலெப்படிப்பலமில்லாமல் நிஷ்பலமாய்ப் போகுமோ அப்படியே நிஷ்பலமாய்ப்போகும், மோட்சம் வேணுமென்று ஒரு தேவதையைக்குறித்துக் கழுத்தையரிந்துகொள்ளுகிறவனெவனோ அவனுக்கும், வெங்காப்பிரவேசமாகிற வனுக்கும், புத்திர தேகாதிகளிடத்திலெப்படி வெறுப்போ அப்படியவனுக்குவிரத்திவருகின்றதோ அவனுக்குச்சந்நியாசங் கூடுமன்றி யிதராளுக்குக் கூடாது—ஆகையால் வைராக்கியம் வந்தவன் சந்நியாசம்பண்ணவேணும்மற்றவன் கிரகத்திலேயிருக்கவேணும், சந்நியாசம் பண்ணியும் விஷய விச்சையிருந்தானால் நரகங்களில்வாதைப்படுவான்—ஆதலால்சகலகன்மங்களையும்விட்ட சந்நியாசியானவன் பூர்வங்கிரகஸ்தனாயிருந்தாலுமப்போதுண்டான விஷயவாசனைகளைவாந்தியசனம் போல் வெறுப்பாயெண்ண வேணும்.

வினா- இனிசிரத்தையாவதேதெனின்,

விடை- குருவேதாந்த வாக்கியங்களில் சத்தியபுத்தியுண்டாயிருப்பதே மோட்சசாதனமான சிரத்தையென்று சொல்லப்படும், இந்தச் சிரத்தையுள்ளபுருடரெவர்களோ அவர்களுக்கேபுருஷார்த்த சூட்சமமாயும்பரமதத்துவமாயுமிருக்கிற சித்தியுண்டாகும் இதராளுக்குண்டாகமாட்டாது, சாமவேதோபநிஷத்தி லுத்தாலகரிஷியானவர் புத்திரனாயிருக்கிற சுவேதகேதுவைப்பார்த்து அப்பா நீ சிரத்தையைப்பொருந்தி யிருமென்று சொல்லியிருக்கிறார்—ஆகையால்யாதொருவனுக்குஞ்சிரத்தையன்றிச் சன்மார்க்கப்பிரவிருத்தியில்லை, சன்மார்க்கப்பிரவிருத்தி யில்லாதவனாயிலதுதானே சாதிக்கப்பட்ட புருடார்த்தமில்லை, அந்தப்புருடார்த்தசித்தியாகில் அசிரத்தையினால் சஞ்சலசனங்களுமடிபட்டுச் சமுசாரசாகரத்தில் மூழ்கிப் போவார்கள்—ஆதலால் வேதத்திலுங் குருவினிடத்திலும் தெய்வத்தினிடத்திலும்மந்திரத்தினிடத்திலும்தீர்த்தங்களிடத்திலும்மகாத்துமாக்களிடத்திலுமெப்படி யெப்படிவிசுவாச மிருக்கின்றதோ அப்படியப்படியே சித்திக்கும்—அப்பா வஸ்துசத்பாவநிச்சயத்தினால் பிரமமுண்டென்றறிய வேணுமந்தச் சத்பாவ நிச்சயம் சாத்திரகுருசித்தமான சிரத்தையினால்வரும்— ஆ

கையால் குருவேதாந்தவாக்கியங்களில் சிரத்தையுண்டான மூ
மூட்சுவுக்கேபலந் சித்திக்கும்அது தவிரச்சித்தியாது.

வினு- அந்தச் சிரத்தை பிரவிருத்திக்கிறதற்குக்காரணமேதெ
னின்,

விடை- ஸ்ரீ சற்குருசொன்னவார்த்தையை யெதார்த்தமா யெ
ண்ணுவதேகாரணம்.

வினு- அதெப்படியெனின்,

விடை- வேதமீசுவரவாக்கிய மென்பது, எதார்த்தமென்கிறதி
ல் சந்தேகமெப்படியில்லையோ அப்படியேமுமூட்சுவாயி
ருக்கிறவனுக்குச் சற்குருவும் ஈசுவரசொரூப மானதால்அவர்
வசனமும் யெதார்த்தமே—சற்குருவேதாந்த வாக்கியங்களி
னுல் யுத்திமான்களாயிருக்கிற சற்புருடானுக்குச் சிரத்தை
யானது சித்திக்கும்.

வினு- இனிசமாதானமாவதேதெனின்,

விடை- வேதத்திற் சொல்லப்பட்ட அர்த்தமறிகிறதின் பொரு
ட்டு வித்துவாம்சிசாளாயிருக்கிறபேர்களுக்கு அறியவேண்
டியவஸ்துவினிடத்திற் சித்தத்தைநன்ருய் நிறுத்துகிறதே
சமாதான மென்று சொல்லப்படும்.

வினு- இதற்குக்காரணமேதெனின்,

விடை- சித்தம், சாத்தியமான பிரமத்தினிடத்தில் நிலைத்திரு
ப்பதேபுருடார்த்தமான நியமத்துக்குக்காரணம் அதுவன்
றிவேறொன்றினுஞ் சாதிக்கப்பட்டசாத்தியஞ்சித்தியாது,
சாத்தியமானது சித்தியாதபோதுமனதுசஞ் சலப்படும் ம
னதுசஞ்சலப்பட்டால்பண்ணினபிரயத்தினம்பலியாது, ஆ
கையால்சித்தமுந்திருஷ்டியுங்காரணமும்ஒருமைப்பாடாய்ஒ
ருவிடத்திலேநிறுத்தினுல் அந்தலெட்சியம்பொருந்தும் அ
து தவிரவொன்றுகுறைந்தாலும்லெட்சியம் பொருந்தாது,

வினு- எப்படியெனின்,

விடை- தனுநாணிலேபூட்டினவம்பானது குறிதப்பினுலெப்ப
டிதப்பியதோவப்படியேவியர்த்தமாய்ப்போம்-வஸ்துசித்தி
க்குச்சித்தசமாதானமேஅசாதாரணகாரணமானதால் மூமூட்
சுக்களாயிருக்கிற பேர்களிந்தச் சமாதானத்தில்சதா நிலைத்திருக்
கவேணும்மிகுந்ததீவிரவைராக்கியமும் பிரமத்தையடையவே

னுமென் றிவிச்சாசடுமாகியவிவ் விரண்டுஞ் சமாதானத்துக்குக்
காரணம்மேலும்பிரமனை வல்லுவையடைகிறதற்குப் பாகியாங்க
மென்றும் அந்தராங்கமென்று மிரண்டங்கங்களுண்டு அவற்றுட்.
பிரமசரியமாதிகள் பாகியாங்கமென்றுஞ் சமாதிஷட்கசம்பத்தி அ
ந்தராங்கமென்றும் பெரியவர்களறிந்து சொல்லுவார்கள் — பாகி
யாங்கத்தைக் காட்டிலுமந்தராங்கம் வலிதானதால் சொரூபத்
தைப்பற்றிவேண்டியவந்தராங்கமான சமாதிஷட்கத்தையே யவ
ஸியமப்பியாஸிக்கவேணும் — யாதாமொருவனந்தராங்கமப்பியா
ஸியாதபடிக்குக் கோடிதிரஞ்சிரவணம் பண்ணினாலுஞ் சொரூப
நிட்டைபொருந்தாது.

வினா- எப்படியெனின்.

விடை- தைரியமில்லாத புருஷனுக்குச் சகலவாயுதமிருந்தும்
யுத்தமுகத்திலெப்படிப்பயமோதோவப்படிபோலென்றறி.

நான்காஞ்சாதனம்.

வினா- இனிமுமுட்சுத்துவமாவதேதெனின்,

விடை- எந்தவிவேகியானவன் பிரமாணமாய் வைராக்கியானு
பவஞானத்தினாற் சமுசாரபெந்தத்தை விடவேண்டுமென்
றெண்ணியிருக்கிறானோ அவனை முமுட்சுவென்று சொல்
லப்படும், அப்பாசகல சாதனங்களுக்குள்ளும் முமுட்சுத்துவ
மூலகாரணம் அந்தமுமுட்சுத்வத்திலிச்சையில்லாமலும் நிற்பிர
விருத்தி யில்லாமலும் எவனிருக்கிறானோ அவனுக்கு வேதாந்த
சிரவணமும் அதன்பலமும் வரமாட்டாது — இந்தமுமுட்சுத்
துவமானது தீவிரமென்றுமத்திமமென்றுமந்தமென்றும் அதி
மந்தமென்றும் நானுவிதமாயிருக்குமென்று பெரியோர்களாற்
சொல்லப்பட்டிருக்கின்றது.

வினா- அதேதெனின்,

விடை- அனேகரூபமாயிருக்கிற அதிதாபத்திரயங்களினால்
நித்தியமுந்தாக்கப்பட்டு வெகுவாயந்தக்கரணைக்கலக்கம
டைந்து பெண்டுபிள்ளை பண்டபதார்த்தங்களையனித்திய
மென்றெண்ணிச் சுட்டசட்டிகைவிட்டதுபோல் விட்டொழிகி
றவனெவனோ அவனைத்தீவிர முமுட்சுவென்று சொல்லப்படு
ம் — மேலுமத்தன்னைவந்தடைகிறதாபத்திரயங்களைக்க
ண்டும் சொரூபத்தினுடைய நிலவரங்கண்டும் பெண்டுபிள்ளை
பண்டபதார்த்தங்களைவிட்டொழியமாட்டாமல் சஞ்சலம்பொ

றதின்பொருட்டு இந்தத்தீவிரமோட்சவிச்சையையெத்தனம்பண்ணவேணும்—அப்பா! புத்திரமித்திரகளத்திராதிசகம்போகங்கள்சென்மங்கடோறுமுண்டாகும் அதில்மனுஷசென்மமும்மனுஷசென்மத்திற்புருஷசென்மமும்அதில்விவேகமுங்கிடைக்கமாட்டாது—ஆகலாலரிதாயிருக்கிற மனுஷசென்ம மெடுக்கிறதிலும்புருஷசென்மமெடுத்துப்புருஷசென்மத்திலும் நித்தியாநித்தியமீதென்றுபகுத்தறிகிற விவேகத்தையடைந்தவன் நித்தியத்தைப்பொருந்தாமலிகலோகவிச்சையைப்பொருந்திவிட்டானாலப்படிக்கொத்த துற்புத்தியோடேகூடின பருடன்தனதுசென்மத்தைக்கெடவேண்டுமென்பதிற்சந்தேகமில்லை.

வினா— அதேதெனின்,

விடை— மிருகபட்சியாதிகள் தினந்தோறும் பெண்டுபிள்ளையோடேகூடிப் போகபாகிய விஷயாதியசனங்களைப் பொசித்துக் கொண்டிருக்கின்றன, அந்தச் சென்மங்களும் இகலோகசுகத்தையிச்சித்திருக்கிற துர்மார்க்கர்களுடைய சென்மங்களுஞ்சரியானதால் தீவிரமோட்சவிச்சையுள்ளபேர் திரும்பவுமிகலோகசுகத்தை இச்சிக்கலாகாது—அப்பா! சரீரத்திலரோகப் விருத்தாப்பியம் வந்தடுக்கிறதற்கு முன்னும் புத்திரனமாகிறதற்கு முன்னும் மிருத்துவைப் பார்க்கிறதற்கு முன்னும் இந்தஞானசஞ்சலமில்லாமல் வேதாந்த சாரத்தைக்கிரகிக்கிறதில் வேகமுள்ளவனை விவேகி சீக்கிரமாக முத்தியடைகிறதின்பொருட்டுத்தீவிரமோட்ச விச்சையில் பிரயத்தனம்பண்ணவேணும்—உலகத்தில்தேவர்களெண்மர் ரிஷிகளெண்மர் பிதிர்க்களெண்மர் இதுவுமன்றியில்மனுஷாளெத்தனைகோடியுண்டு. அதில்சென்னபாகிறபெந்தத்தை நன்றாய்விட்டுவிட்டுப்பிரமநிஷ்டனாயிருக்கிறவனொருவனிருப்பானென்றறி—அப்பா அந்தப் பெந்தத்தினால் கட்டுப்பட்டிருக்கிறவனுக்குப்பாகிய பெந்தம்விட்டதினால்பிரயோசனமேதிருக்கிறது ஆனதாலந்தப்பெந்தத்தைவிடுகிறதின் பொருட்டெந்தத்தொழிற்செய்யவேணுமோ அந்தத்தொழிற்செய்கிறபேர்களோடேகூடி அதுசெய்யவேணும்—அந்தத்தொழிலினுடைய ஒருமிப்பே தீவிரமோட்சவிச்சையென்றுசொல்லப்படும் அதைவிட அன்னியமானதெல்லாஞ்சொல்லுக்குயோக்கியமானதே தவிரச்சுருதிசம்மதமில்லை—ஆனதால் கிரகபுத்திரதனதிகளையெல்லாம் அனித்தபுத்தியாயெண்ணிவிட்டுப் புருடசகுக்கிய விச்சை

யினால் மிர்தமாய்ப்போன புருடனோடேகூட அக்கினிப்பிர வேசம் பண்ணுகிற ஸ்திரீகளுக்குத் திடவைராக்கிய மெப்படிபொருந்திறதோ அப்படி தீவிரவைராக்கியம் பொருந்தியிருக்கிறவனுக்கே மோட்ச இச்சையானபலன் சித்திக்கும்,

வினா- இந்தமோட்சவிச்சாபலன் சித்திக்கிறதற் குக்காரணமே தெனின்,

விடை- நித்தியாநித்திய வஸ்து விவேகமாந் தேகத்திலிடத்திலனித்தியத்துவபுத்தியு மிருக்குமிவிடத்தில்வருகிற பயமும் பயத்தினாலுண்டானதாபமுமறிகிறதே காரணம், ஆயினும் வைராக்கியம் வருகிறதற்குக்காரணம் நித்தியாநித்திய வஸ்துவிவேகமே, சந்நியாசத்துக்குக்காரணந்தீவிரவைராக்கியம், சிரவணாதிகளுக்குக்காரணஞ்சந்நியாசம், ஞானத்துக்குக்காரணம் சிரவணாதிகள் என்றறிந்த இந்தஞானமானது மோட்சத்துக்கேதுவானதாலிதற்குமுன்சொன்னலட்சணங்களைப்பொருந்தின விவேகிகளைச்சதாகாலமும் பசனைபண்ணவேணும்— அப்பா நித்தியாநித்தியவஸ்துவிவேகமே சிரசு, இகமுத்திரார்த்த பலபோகவிராகமேகழுத்து, வைராகமேசரீரம், சமாதிசட்கசம்பத்தியே அங்கங்கள், முமூட்சுத்துவமேபிராணனென்றுசொல்லப்படும்— இப்படிச் சாதுவடிவுடனே கூடியசொரூபத்தையறியவேணுமென்று புத்திசாலியானவன் ஞானகுரு வேதாந்தவாக்கியங்களாகிற சாணையில் தீட்டப்பட்டநல்லஞான மென்கிறவாளினால் மிருத்துவைச்சங்கரிப்பன்— ஆனதாலிப்படிசொல்லப்பட்ட சாதனசதுட்டயசம் பத்தியுள்ளவனு யான்மாவையடையவேணுமென்கிற புருடன்தன்னையறிகிறதின் பொருட்டுக்குருவைக்குறித்து உபசாரபாணியாகவொடுக்க வணக்கத்துடன் போகவேணும்.

## ஆசாரியலட்சணம்.

வினா- அந்தக்குருவானவரெப்படியிருக்கவேணுமெனின்,

விடை- சகல வேதார்த்தங்களை யறிந்தவராயும் பிரமநிட்டை பொருந்தினவராயும் சாந்தியுடையவராயுஞ் சத்துருமித்துருசமசம்பன்னராயும் மதவகங்கார மில்லாதவராயுஞ் சீதோஷ்ணசமத்துவம்பொருந்தினவராயும்விடயாசத்தியில்லாதவராயும் ஒன்றின்மேலபேட்சியாதவராயும் ஆசாரசாமர்த்தியமுள்ளவராயுமிருக்கிறவரெவரோ அந்தப்பிரமநிஷ்டரே சிரேஷ்டமான சற்குருவாம்— அப்படிக்கொத்த சற்குருவைத்தன்னை யறியவேண்டினவன் அந்தவஸ்து சித்திக்கும் பொருட்டுஅவரிடத்

ட்சத்தினால்சுகர்வாமதேவாதிகள் அஞ்ஞானங்களைவிட்டுச்செ னனமரணரூபமானசமுசாரபந்தங்களைவிட்டொழிந்தார்கள். அப்படிக்கொத்த சிவகடாட்சமானது அநந்தஜென்மமெடுத்துப்பசுதிசெய்ததினாலே பிறவிவிடுகிறதற்கு ஏதுவாகவரும். அப்பா! லோகத்திலே மனுஷனுக்கு வெகுஜென்மங்களிலே ஈசுவரார்ப்பிதமாய்ச்செய்ததபசுகளினாலும் ஈசுவரப்பிரசாதத்தினாலும்விவேகப்பிறக்கும் ஆனதால் நீயும்பரமார்த்தத்தையடைகிறதின்பொருட்டு ஆரம்பம் பண்ணினவனானலல்லவோ மனுஷனுக்கு விவேகம் வந்ததற்குப்பலன் — அப்பா! மனுஷஜென்மமெடுக்கிறதிலும் புருஷஜென்மமாகவும்அதிலும்பிராமணஜென்மமாகவும் அதிலும் விவேகம் பொருந்தினவனாகவுமிருக்கிறது மோட்சத்துக்கு முக்கியபலமென்று பெரியவர்களால் சொல்லப்பட்டிருக்கிறது — இந்தவிவேகமில்லாமற்போனால் எல்லாம்வியர்த்தமாய்ப்போம் மோட்சமுமில்லை ஆனதால் நீகேட்டசங்கைகள்நல்லதே, ஆத்மதத்துவத்தையடைகிறதிலேயிச்சையுடன் கூடினவனாயிருக்கிறஉனக்குச்சங்கைகளையும் ஆதிமுதற்கொண்டுநன்றாய்த்தெரியும்படி சொல்லுகிறேன், சந்தோஷத்துடன் கேட்பாயாக — அப்பா! மனுஷத்துவமுன்னிடத்திற்பிரமையினாற்கற்பிக்கப்பட்டிருக்கின்றது அதினாற்பிறவிமுதலான துக்கங்களுண்டாயிற்று அதினாலுண்டான துக்கங்களுக்கில்லை அந்ததுக்கங்கள்சுத்தப்பொய் அதெப்படியென்றால் நித்திரையாகிற மோகத்தினாலடையப்பட்டிருக்கிறசுகதுக்கங்கள் நித்திரை தெளிந்தெழுந்தபோது ஒருவிடத்திலாகிலு மெய்யாய்க் கண்டதுண்டோ — அப்படியிருக்கச்சகலஜெனங்களாலும் பிரத்தியட்சமாய்க் காணப்பட்டிருக்கிற இந்தப்பிரபஞ்சத்தைப்பொய்யென்றெப்படிச்சொல்லப்படுமென்று நீ மோகத்தினால்விசாரணையில்லாமற்சொன்னசங்கைகூடாது.

வினா- அதெப்படியெனின்,

விடை- கூகையினுடைய திருஷ்டிக்குப் பிரகாசமான பகலானது பிரத்தியட்சமாயெப்படி யிருளாகத் தோற்றுகிறதோ அப்படியே பிரமையினாலடையப்பட்ட பிரத்தியட்சசாதி விவகாரங்களெல்லாம் பிராந்தனுக்குச் சத்திய மாய்த் தோற்றும்,

வினா- அதெப்படியெனின்,

விடை- இதுகடமென்கிறபோது அந்தப்பேருடனேபிரத்திய

சத்துமல்ல, அசத்தோவென்றால் அசத்துமல்ல, ஆனதால் அ
நிர்வசனியமென்றுந் திரிகுணங்களோடு பொருந்தினதென்று
ம் வஸ்துதத்துவத்தையறிந்ததினால் வாதிக்கப்பட்டுப் போ
மென்றும் அபாவலக்ஷணமென்றுஞ் சொல்லப்படும்—அவ்
வஞ்ஞானம் பொய்யான கட்டுறவினால் பிரமத்தினிடத்தில்
ஆசிரயித்துக் கொண்டிருக்கிறது.

வினா— பிரமத்தினிடத்தில் அஞ்ஞானமாசிரயித்துக் கொண்டி
ருந்தால் ஆசிரயதோஷம் வருமோவெனின்,

விடை— சுத்தியில் வெள்ளியாசிரயித்திருந்ததினால் சுத்திக்கெ
ட்டபடியாசிரயதோஷம் வரவில்லையோ அப்படியே பிரமத்
துக்குமாசிரயதோஷமில்லை.

வினா— இப்படிசொன்னால் பிரமமென்றுமஞ்ஞானமென்றுமிர
ண்டுவிதமாயிற்றேயெனின்,

விடை— அவ்வஞ்ஞானத்துக்குப் பிரமத்தைத்தவிர சுதா சத்
தையில்லாதபடியினால் இரண்டாகமாட்டாது.

வினா— ஆனாலஞ்ஞானமுண்டென்கிறதிலடையாளமேதெனின்,

விடை— சராசரமான செகத்திருக்கிறதும் வேதசாஸ்திரங்களிரு
க்கிறதும் நானஞ்ஞானி என்கின்றவனுபவமிருக்கிறதும் அ
டையாளம்—ஆனதாலந்த அஞ்ஞானத்தையே மூலப்பிரகி
ருதியென்றும் சத்தியென்றும் அவித்தையென்றுஞ் சொல்
லப்படும் அதுசத்துமல்ல, சத்தைத்தவிரப் பின்னமுமல்ல
அபின்னமுமல்ல.

வினா— ஆனால், தீபமும்பிரகாசமுமான சாவயவமோவெனின்,

விடை— சாவயவமுமல்ல.

வினா— வித்துமுளையுமான நிரவயவமோவெனின்,

விடை— நிரவயவமுமல்ல, ஆனதால் அநிர்வசனியமென்றே பெ
ரியவர்களால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது—இப்படிக் கொ
த்த அஞ்ஞானத்தைச் சமஷ்டிவியஷ்டியென்றிரண்டு விதமா
கச் சொல்லப்படும்.

சமஷ்டி.

வினா— அதேதெனின்,

விடை— நானாவிதமாய்த்தோற்றப்பட்ட அஞ்ஞானங்களை ஒன்

றாய்க்கூட்டிச்சமட்டியென்றும் தனித்தனியேபிரிப்பது வியட்டியென்றுஞ் சொல்லப்படும்.

வினா- சமட்டியாவதெப்படியெனின்,

விடை- நானாவிதமாய்த்தோற்றப்பட்டிருக்கிறமரங்களெல்லாம் ஒன்றாய்க்கூட்டி ஒருதோப்பென்பதுபோல, நானாவிதமான அஞ்ஞானங்களை அபேதமாய் ஒன்றாய்க்கூட்டுகிறதே சமட்டி யெனப்படும்- இந்தச்சமட்டி அஞ்ஞானமானது சுத்த சாத்திகுணம்பொருந்திச் சிரேஷ்டமானதுபற்றி மாயையென்று சொல்லப்படும், அந்தமாயையின் பிரதிவிம்பத்தைத் தன்னிடஞ்சர்வஞ்ஞத்துவாதிகுணங்களுஞ் சிருஷ்டிஸ்திதிசம்மாரமும் பொருந்தினதால் அவ்வியாகிருதமென்றும் அவ்வியத்தமென்றும் ஈசுரனென்றுஞ் சொல்லப்படும்- இந்தமாயாப்பிரதிவிம்பமான ஈசுரனுக்குச்சர்வசத்தி குணங்களுஞ் சகல அஞ்ஞானங்களை விளங்கச்செய்கிறதும் சுதந்தரத்துவமுஞ் சத்திய சங்கற்பத்துவமுஞ் சத்தியகாரியத்துவமும் இருக்கையால் ஈசுவரனென்றும்- இந்த ஈசுவரனுக்குச்சர்வஞ்ஞத்துவமும் ஈசரத்துவமும் சத்திய சங்கற்பத்துவமும் சுதந்தரத்துவமுமுண்டாகிறதற்குக் காரணமான சுத்தசாத்திகம் பொருந்தின சமட்டியஞ்ஞானமாகிய மாயையே யவருக்குக்காரண சரீரமென்றும் பெரியவர்களாற் சொல்லப்படும்- இந்தமாயையானது, ஈசுரனுக்குமிகவுமானந்தம் பொருந்தச் செய்து சத்தியைப்புறையானது மறைத்ததுபோல ஆவரணமாகஈசுரசொரூபத்தை மறைக்கையால் ஆனந்த மயகோசமென்றும்- இப்படிப்பட்டமாயைதானே ஈசுரனுக்குச் சர்வசங்காரத்துவ காரணமான சுழுத்திஸ்தானமென்றும் பிராகிருதப்பிரளயமென்றுஞ் சொல்லப்படும்- இந்தமாயையாகிய அஞ்ஞானத்தைவியட்டியபிப்பிராயமாய் விசாரிக்கும்போது அநேகவிதமாய்ப் பின்னமாயிற்று, அந்த வஞ்ஞானவிருத்திகளே யொன்றுக்கொன்று குணவிலட்சணமானதால் நானாவிதமென்றுசொல்லப்படும்.

## வியஷ்டி.

வினா- அதெப்படியெனின்,

விடை- வனத்தைத்தனி வியஷ்டியாய்விசாரிக்கும்போது மரங்களே அநேகவிதமா யெப்படியோ அப்படியே அஞ்ஞானத்தை வியஷ்டியினால் அநேகவிதமாகவிருக்கும்- இந்தவியஷ்டிவியஷ்டிகளிலெல்லாங் குணத்திரயங்களில் வியபிக்கப்பட்டிருப்பதனித்தனிச்சமஷ்டி வியட்டியென்கிற பேருண்டாயிற்று- இவ்வி வியட்

து நிருமலமானது பந்தத்துக்கு முத்தியானதால் மனது நிருமலமாம்படியாருட்டுவிவேகியானவன் சதாமனோநிக்கிரகம் பண்ணவேணும்— முன்சொல்லப்பட்ட தனித்தனியாயிருந்த சூட்சமபஞ்சபூதங்களில் ஆகாசதத்துவாங்கலந்ததில் நின்றுவாக்குபாதம்பாணிபாயுருவுபஸ்தமாகிற கன்மேந்திரியங்களுண்டாயின.

வினா- அதெப்படியெனின்,

விடை- ரசோகுணங் கலந்தவாகாசத்தில் வாக்கிந்திரியமும் அவ்வக்கினியிற்பாதவிந்திரியமும் அவ்வப்புவில்பாயுவிந்திரியமும் அப்பிருதிவியிலுபஸ்தேந்திரியமுமுண்டாயின - அந்தச் சூட்சமபஞ்சபூதங்களிற் றனித்தனியாகவிருந்த ரசோகுணங்களைந்துமொன்றாக்கொண்டு கலந்து சமட்டியாய்க்கூடிய பொருளிதினால்கிரியா ரூபமான பிராணாதிவாயுக்களுண்டாயின, இந்தப் பிராணாதி பஞ்சவாயுக்களை யேவுகிறதுவைதுகள் விசிட்டமென்றும் விசுவகர்த்தாவென்றும் விசுவயோனியென்றும் பசென்றுமயசெனென்றுஞ்சொல்லப்படும்.

வினா- இந்தப்பிராணாதிவாயுக்களுடைய லட்சணமேதெனின்,

விடை-ஊர்த்துமுகமாய்ப்புறப்பட்டதாற்பிராணனென்றும் அதோமுகமாய்ப்புறப்பட்டதினால் அபானனென்றும் உள்ளே வியாபகமாயிருப்பதால் வியானனென்றும் பொசிக்கிறபதார்த்தங்களைக் கண்டத்திலிருந்திறக்கிறதினால் உதானனென்றும் அப்படியிறங்கின அன்னசாரத்தை நாடிகள்தோறுங் கலக்கச்செய்கிறதினாற் சமானனென்றுஞ் சொல்லப்படும்— இதல்லாமலும் உபவாயுக்களஞ்சுண்டு,

வினா- அவையேதெனின்,

விடை- விக்கல் பிறப்பிக்கிறது நாகனென்றும் கண்ணை இமைத்துவிழிப்பிக்கிறது கூர்மனென்றும் தும்மலுண்டுபண்ணுகிறது கிரிகரனென்றும் கொட்டாவியுண்டாக்குகிறது தேவதத்தனென்றுஞ் சரீரத்தைப்படுக்கப் பண்ணுகிறது தனஞ்செயனென்றுஞ் சொல்லப்படும்— இந்தவுபவாயுக்களஞ்சு முன்சொன்ன பிராணாதிபஞ்சகத்திலொடுக்கம். இந்தப்பிராணாதிகன்மேந்திரியங்கள் கிரியைசெய்கிறதே பிரதானமானதால் ரசோகுண அம்சத்திற் பிறந்ததென்று பெரியோர்களாற் சொல்லப்பட்டிருக்கின்றது— இந்தராசதசத்தியானது கிரியை

தன்னியந்துக்குத்தைசதனென்றும் பெரியவர்கள் சொல்லு
வார்கள்.

வினா- அதெப்படியெனின்,

விடை- தேஜோமயமான அந்தக்கரணத்தை உபாதியோடே கூடி
னதால் தைஜசனென்றும் ஸ்தூலத்தைக் காட்டிலுஞ் சூட்சும
மானதால் வியட்டி சூட்சுமசரீரமென்றும், இந்தச் சூட்சு
மசரீரமானது சாக்கிரத்திலுடைய வாசனைகளைச் சூட்சுமமாய்க்
காண்கிறதால் சொப்பனவஸ்தையென்றும் இவனவன் அந்
தச்சொப்பனத்திற் செய்கிற கிரியைகளைச் சூட்சுமமாய்ப் புசிக்கிற
தால் பிரவிவிக்தபுக்கென்று சொல்லப்படும் — இந்தத் தைசத
னென்பவன் சொப்பனத்திற் சாக்கிரகாலத்திலுண்டாக்கப்பட்ட வா
சனைகளைச் சூட்சுமபுத்திவிருத்திகளினாற் சூட்சுமவிஷயங்களை
ப் புசிக்கிறான் — இந்தச் சமட்டி சூட்சுமசரீரங்களும் வியட்
டி சூட்சுமசரீரங்களுமுன் சொன்ன காரணசரீரத்தைப்போலச்
சாதிவுவத்தமையானதால் அபேதமென்றறி — இந்தச் சூட்சுமவி
யட்டிசமட்டியிரண்டையும் ஒன்றாவினை அபிமானித்த சூத்தி
ராத்மா தைசசனிரண்டும் முன்சொன்ன காரணசரீர அபிமா
னிகளாகிய பிராஞ்ஞஈசுரர்களைப்போலவே அ
பேதமென்றும், இந்தப்படி சூட்சுமப்பிரபஞ்சத்திலுடைய உற்
பத்தி சாஸ்திரசம்மதமாய்ச் சொல்லப்பட்டது — இனிஸ்தூ
லப்பிரபஞ்சத்திலுடைய உற்பத்தி சொல்லுகிறோம்.

ஸ்தூலப்பிரபஞ்சம்.

வினா- அதெப்படியெனின்,

விடை- முன் சூட்சுமமாயிருந்த ஆகாசாதி பஞ்ச பூதங்க
ளொன்றுக்கொன்று பஞ்சீகிருதமாக்கலந்து ஸ்தூலபூதங்க
ளாயின.

வினா- அதெங்ஙனெனின்,

விடை- ஆகாசாதிபூதங்களைஞ்சும் ஒவ்வொன்றிரண்டாய்ப்பிரி
ந்தன, அதில்தன்னுடைய பாகாங்கிசம் பாதியிருப்பவை
த்து மற்றப்பாதியைந்து மொவ்வொன்று நான்காய்ப்பிரி
ந்து பாகாங்கிசம் நீங்கலற்ற நாலுபூதங்களிலுமொன்றொன்
றொன்று அரைக்கால் பங்காய்ச்சேர்ந்தன — இப்படிப்பிரிந்த ஆ
காசாதிபூதங்களிலும் தன்னுடைய பாகாங்கிசமான பாதியும் மற்
றநான்காய்ப்பிரிந்த பூதங்கள் பாதியும் ஒருமித்துக்கூடி
ஒவ்வொன்று ஐந்துபாகமாக்கலந்து ஸ்தூலபூதங்களாயின — இ
ந்தப்பஞ்சீகரணத்தை அப்பிரமாணமென்று சங்கிக்கவே
ண்டாம்

விஞ- சாமவேதோபநிஷத்தில் திரிவிதகரணமாய்ச்சொல்லியி ருக்கின்றதேதெனின்,

விடை- வாயுவாகாசங்களிரண்டும் அமிர்த்தத்திரவியங்களானதாலு ம்மிர்த்திரவியங்களாகிய பிருதிவு அப்புத்தேயுக்கள் அதில் ஒடுக்கமாகையாலும் இந்தப்பஞ்சீகரணத்தைப்பிரமாணிய மென்று பெரியவர்களாற் சொல்லப்படும்—இப்படி சொல்ல ப்பட்டபஞ்சீகரணமன்றித் திரிவிதகரணஞ்செய்தாற்பிரத்தி யட்சாதிவிரோதம் வரும் ஆனதாலிந்தவாகாசவாயுக்களுடைய தன்மம் வன்னியாதிகளிற் காணப்பட்டிருக்கிறது அந்தவாகா சவாயுக்களில்வன்னியாதிதன்மங்காணப்படவில்லை.

விஞ- அதெதனாலெனின்,

விடை- இந்தவன்னியாதியங்கிச வியாப்தியான அகொருசமா ய்க்கலந்ததினால் இதினுடைய தர்மமாகாசவாயுக்களிலகாணப் படவில்லை—சமஸ்தத்திலுங் காரணத்தைப்போற் காரிய முங்காணப்பட்டிருப்பதாலிந்தப் பஞ்சீகரணம் பிரமாண மென்றேபெரியவர்களறிந்திருக்கிறார்கள் ஆனதாலிந்தப்பஞ் சீகரணத்தினுண்டான ஸ்தூலபூதங்களுடைய கிரமமுங்கேட் பாயாக,

விஞ- அதேதெனின்,

விடை- ஆகாசத்துக்குக்குணம் சத்தம்வாயுக்குக்குணம்சத்த பரிசம் தேயுவுக்குக்குணஞ் சத்தபரிசரூபம் அப்புவுக்கு க்குணம் சத்தபரிசரூபரசம் பிருதிவுக்குக்குணஞ் சத்தபரி சரூபரசகெந்தங்களென்று சொல்லப்படும்—இந்தவாகாசா தியங்கிசகுணங்கள் ஞானகர்மேந்திரியங்களில் காணப்பட் டிருக்கிறது.

விஞ- அதேதெனின்,

விடை- சுரோத்திரம்ஆகாசாங்கிசமானதால்சத்தத்தையும்தொ க்குவாயுவாங்கிசமானதால் பரிசத்தையும் சட்சுஅக்கினியாங் கிசமானதால் ரூபத்தையுஞ்சிங்குவை அப்புவினங்கிசமான தாலிரசத்தையும்ஆக்கிராணம் பிருதிவியங்கிசமானதால் கெந் த்தையுங்கிரகிக்கின்றது—வாக்கும் ஆகாசாங்கிசமானதால்வச னிக்கும் பாணியும் வாயுவாங்கிசமானதாலிடுதலேற்றுதல்செய் யும்பாதமும் அக்கினியாங்கிசமானதால் கெமனாதி தொழில்க ளைச்செய்யும் பாயுரு அப்புவினங்கிசமானதால் மலவிசர்க்கங்

ருத்தனைக்கொண்டு செய்வியாமலுமிருக்கப்பிராணிகள் தங்கள் சுபாவகுணங்களினால் பிரவிர்த்திக்கிறதுபோல திஷ்டிரியனை பிரத்தியான்ம சந்நிதானத்தில் நின்று தேகேந்திரியாதிகள் சேஷ்டிக்க அவனவர்களுக்கெல்லாஞ் சாட்சியாயிருக்கிறார்—இப்படிக்கொத்த பரமதத்துவத்தை அறியமாட்டாமல் மாயையினால் மோகிக்கப்பட்டபுத்தியை யுடைத்தானவர்கள் தனக்கன்னியமான தேகேந்திரியாதிகள் செய்கிறதொழிலை ஆன்மாவாயிருக்கிற தன்னிடத்தி லாரோபித்துக்கொள்ளுகிறார்கள்.

வினா- மூடனாயிருக்கிற புருடனானவன் அசங்கனாகவுஞ் சித்தரூபனாகவுமிருக்கிற ஆன்மசொரூபத்தைக் காணாமல் ஆன்மாவினிடத்திலேயனான்மகாரியமான தொழில்களையாரோபித்துக் கொள்ளுகிறதெப்படியெனின்,

விடை- ஆகாசத்தில் சந்திரனையோட்டாமலிருக்கிற மேகங்களோடுகிறதைக்கண்டு சந்திரனோடுகிறானென்பதுபோலாம்-ஆதலால், அப்பா! ஆன்மானான்மவிவேகமுனக்குத் தெரியும்படி மூன்றுதாகச் செகத்துண்டானவழியை அன்புடனே சொல்லுகிறோம் விவேகியாயிருக்கிற சீடனே நீகேட்பாயாக.

## ஸ்தூலப்பிரபஞ்சம்.

வினா- அதேதெனின்,

விடை- நசுரலட்சணம் பொருந்தின பஞ்சீகிருதமான ஆகாசாதி ஸ்தூலபஞ்சமகாபூதங்களினாலிந்தச் சராசரமான பிரமாண்டங்களுண்டாயின—இந்தப்பிரமாண்டத்துட் பட்ட நாலுவகையோனியாகிய சகல சரீரங்களுக்கும் நெல்லுமுதலாகிய சகல ஓஷதிகளும் வாயுவுந்தேஜசு அப்புபூமிகளுடன் அன்னமாயின,

வினா- அதெப்படியெனின்,

விடை- சிலசெந்துக்கள்வாயுவுபட்சணம்பண்ணுகிறதும் சிலசெந்துக்கள் சந்திரகிரணஞ் சூரியகிரணங் களைப்பட்சணம் பண்ணுகிறதும் சிலசெந்துக்கள் மேகத்திவலைகளைப்பட்சணம் பண்ணுகிறதும் சிலசெந்துக்கள் மண்ணைப் பொசிக்கிறதும் சிலசெந்துக்கள் கல்லுகளைப்பொசிக்கிறதும் சிலசெந்துக்கள் பழுப்பிலைகளைப் பொசிக்கிறதும் சிலசெந்துக்கள்புல்லுகளைப்பொசிக்கிறதும்சிலசெந்துக்கள்மாமிசாதிகளைப்

பொசிக்கிறதும்சிலசெந்துக்கள்நெல்லுமுதலியதுகளைப்பொசிக்கிறதுமாய்ச் சீவிக்கின்றனவாம்.

வினா- நாலுவகையோனியாவதேதெனின்,

விடை- சராயுசமென்றும்அண்டசமென்றும்சுவேதசமென்றும் உற்பீசமென்றும்நாலுவகையோனிகளாய்அதனதன்கர்மானுசாரமாயிந்தச் செந்துக்கள் பிறக்கின்றன, அவற்றுள்சராயுசமாவது கோற்பையில் நின்றும் பிறந்தமனுடர் முதலான செந்துக்களும், அண்டசமாவது முட்டையில் நின்றும் பிறந்த பறவைமுதலானசெந்துக்களும், சுவேதசமாவதுவேர்வையில் நின்றும்பிறந்தபேன்ஈர்முதலானதுகளும், உற்பீசமாவது பூமியைப் பேதித்துக்கொண்டு பிறந்தவிருட்சமுதலானதுகளுமென்று சொல்லப்படும்— இந்நாலுவிதமான பௌதிகங்களே ஸ்தூலசரீரமாயின- இந்தத்தூலசரீரங்களைத்திருஷ்டியேக சித்தமாய்ப்பார்க்கிறபோதுசமஷ்டியென்றும்— இந்தச் சமஷ்டி ஸ்தூலசரீர அவிச்சின்னமாகியும் பிரதி விம்பமாகியுமிருக்கிற சைதன்னியமெதுவோஅந்தச்சைதன்னியத்தையேஉலகத்திலுள்ளமனுஷாதி செந்துக்களில் நானென்கிற அபிமானத்தைவைத்ததால் வைசுவாநரனென்றும் நானாவிதரூபங்களாய் விளங்குகிறதால் விராட்டென்றும் இந்தச்சதுர்விதங்களானஸ்தூலபௌதிகசமஷ்டிகளில்அதனதன்சாதிவிசேடங்களாய்ப்பிரித்துப் பின்னமாய்ப் பார்க்கிறபோது வியஷ்டியென்றும் இந்தவியஷ்டி ஸ்தூலசரீரத்தில் அவிச்சின்னமாகவும் பிரதிவிம்பமாகவுமிருந்த சைதன்னிய மெதுவோ அதையே விசுவமாயிருக்கிற ஸ்தூலதேகத்தில் நானென்கிற அபிமானம்வைத்திருப்பதால் விசுவனென்றும் அந்த வியஷ்டியான விசுவனுக்கு ஸ்தூலசரீரமென்றும் இந்தஸ்தூலசரீரமானது அன்னவிகாரமானபடியினால்அன்னமயகோசமென்றுஞ்சொல்லப்படும்.

வினா- அதெப்படியெனின்,

விடை- இந்த ஸ்தூலதேகமானது, பிதாப்பொசித்த அன்னவிகாரத்தினாலுண்டான சுக்கிலசோணிதங்களால்பிறந்து அன்னத்தினால்விருத்தியடைகின்றது அன்னசாரமில்லாதபோது நசித்துவிடுகின்றது— ஆகலால் ஸ்தூலதேகம்அன்னவிகாரமானபடியினால்அன்னமடமென்றும்ஆனந்தமயகோசமுதலான நாலுகோசங்களையும் வாளாயுதத்தை உறையானது மறைத்ததுபோல்மறைத்திருப்பதாலன்னமயகோச மென்றும் இந்தஸ்

தூலதேகமென்று ஆன்மாவுக்கு ஸ்தூலபோகங்களைப் புசிக்கிறதற்கிருப்பிடமென்றும் பெரியோர்களாற் சொல்லப்படும்.

விந- அதேதெனின்,

விடை- ஆன்மாவானவர் சரீரத்திலிருந்து ஸ்தூலமான சத்தாதிவிஷயங்களைப் பொசிக்கிறதுக்கு ஸ்தானமாய்ப் பாத்திரமாயிருந்ததால ஸ்தூலதேகம் போகமனுபவிக்கிறதற்கு இருப்பிடமென்று சொல்லப்படும்.

விந- போக்தாவென்பதேதெனின்,

விடை- இந்திரியங்களினாற் கொள்ளப்பட்ட சத்தாதிவிஷயபோகங்களை ஆன்மாவானவர் தேகேந்திரியமனதோடே கூடி அனுபவிப்பதால் போக்தாவென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

விந- அதெப்படியனுபவிக்கிறாரெனின்,

விடை- பதினொருவாசல் பொருந்தின தேகமான மேடையில் இந்திரிய பஞ்சவர்க்கங்களாகிற பரிவாரங்கள் சூழ ஆன்மாவானவர் மகாராஜனாய் அகங்காரமென்கிற சிங்காதனத்திலிருந்து விஷயபோகங்களைப் பொசித்துக்கொண்டிருக்கிறார்— இப்படிக்கொத்த ஆன்மாவை ஞானேந்திரியங்களைந்தும் அதற்கதிதேவதைகளைந்தும் கர்மேந்திரியங்களைந்தும் அதற்கதிதேவதைகளைந்தும் மனதுமுதலானதும் அதற்கதிதேவதைகளைந்தும் அதனதன் தொழிலிற் ப்ரேரித்தபிரகாரமாயிருந்துக்கொண்டு உள்ளியக்காரர்போல் சாக்கிருதையாய்ப் பஜனைபண்ணுகின்றன— இந்த ஆன்மாவானவர் ஸ்தூலதேகத்தோடே கூடித் தூலவிஷயங்களைப் பொசித்துக்கொண்டிரானை ஜெதன்றுவிகாரம்பண்ணுகிறதால் இதுவே சாக்கிர அவத்தையென்றும், இப்படிசொல்லப்பட்ட சமட்டிவியட்டியானசரீரங்களுக்கு அபிமானிகளான விச்வவைசுவாநரர்களுக்குஞ் சாக்ஷிஸ்துமுன்சூட்சுமகாரணவியட்டிசமட்டிக்குச்சொன்னது போலப்பேதமில்லாமல் அபேதமென்றும், இப்பாதுனைக்குச்சொன்ன தூலசூட்சுமகாரணப் பிரபஞ்சங்களெல்லாம் ஒன்றாய்க்கூட்டி மகாப்பிரபஞ்சமென்றும், இந்தமகாப்பிரபஞ்சத்துக்கு அவிச்சின்னமாகவும் விஸ்வப்பிரஞ்ஞாதி லட்சணமாய் விராட்டுமுதல் ஈசுரபரியந்தமும் நின்ற சைதன்னியம் ஒன்றேயென்றும், யாதொருசைதன்னியம் அனுதியாகவும் அனந்தமா

சவும்வ்வியத்தமாகவும் அசமாகவும் அட்சரமாகவு மிருக்கின்ற தோ அதுவேயிந்தமகாப் பிரபஞ்சத்துடன் கூட்டாய பின்டம் போத்தலத்திருப்பதால் சர்வம்பிரம மென்னும் மகாவாக்கியத்தித் சொல்லப்படுகின்றது இந்தவாக்கியார்த்தத்தைப் பெரியவர்களால் வாச்சியார்த்தமென்றும் இதைவிட்டுபிரிந்த ஆன்மாவுக்கு லெட்சியார்த்த மென்றுங்காரிய காரணலட்சணமான ஸ்தூலமுதல் ஞானபரியந்தங் காணப்பட்ட சகலத்தையுமு ளுண்மையென்றுஞ்சொல்லப்படும்.

வினா- ஆன்மாவாவதாரெனின்,

விடை- அந்தக்கரணத்தையும் அதினுடைய தொழிலானமனோ புத்திசித்தவகங்காரங்களையுங் கண்டுகொண்டுதானும் அழியாதபடி விகாரமின்றியிருந்ததை யன்யமெதுவோ அதும் ஆன்மாவென்று சூட்சமபுத்தியினு லறிந்துக்கொள்—மேலும், இந்தப் பிரத்தி கான்மா வானவர் சுயம்பிரகாசர் நிரங்கிசர் அசங்கர் சர்வகாலத்திலுமேக ரூபமாயிருக்கிறவர் நித்தியர் அகண்டானந்த சொரூபர் சகலத்தையுமறிறவர் சாட்சி நிர்குணரென்றும், இவர் பிறக்கவுமில்லை யிறக்கவுமில்லை வளரவுமில்லை குறையவுமில்லை யானதால் நித்தியர் சாசுவதர் புராணரென்றும் இவர் சரீரங்கள் கொல்லப்பட்டு மரித்துப்போகிற போதுந்தாஞ் சொல்லப்பட்டவருமல்லமரித்தவருமல்லவென்றும் அறியவாயாக.

வினா- அதெப்படியெனின்,

விடை- தேகத்திலுண்டாயிருக்கிறான் பிறந்தான் வளர்ந்தான் ஓடியாடித் திரிந்தான் ஒரு நாளைக்கொரு நாள் குறைந்து மிறந்தானென்கிற ஆறுவிகாரங்களுந் திரிசிய மாயிருக்கிற தேகத்துக்கே தவிர ஆன்மாவுக்கில்லை இதுவன்றியுந் தாலமேல் கிறதும் கிருசமெல்கிறதும் கறுப்பென்கிறதும் சிவப்பென்கிறதும் வர்ணாச்சிரமங்களும் அதினுடையதர்மங்களும் சரீரத்துக்கே தவிர இந்தவிகாரங்க ளெல்லாம் சாட்சியாயிருக்கிற ஆன்மாவுக்கில்லை—இப்படிக்கொத்த பிரத்தியகான்மா வினிடத்திலுண்மைத்துவமும் அதுன்மாவாயிருக்கிறதேகாதிகளிடத்தில் ஆன்மத்துவமும் விபரீதமாகக் கற்பித்துக்கொண்டு மோகத்தினுல் சம்சாரசாகரத்தில் சுழலுகிறான்.

வினா- அதெப்படியெனின்,

விடை- என்றிப்படி கேட்ட சீடனைப்பார்த்து குருவானவர் சொல்லும்படிவாராயச்சீடனே ஆன்மாவானவர் மனோவாக்காதிகளுக்கு விடயமாய்க் காணப்படுகிறவரல்ல அப்படியிருந்தாலும் நானென்கிற அனுபவம் அபரோட்சமாய் சகலருக்குங் கண்டிருப்பதால் ஆன்மாவிருக்கிறது பிரசித்தமே இப்படியான்மாவிருக்கிற தற்கடையாளமாயிருக்கிறது ஒருவருக்கும் நானல்லவென்கிறது சொல்லப்படவில்லை— நானிருக்கிறேனென்கிறதில் ஒருவரும் சாட்சியொப்பனைதேடவில்லை இப்படிபிரமாணங்களுக்கெல்லாம் பிரமாணிய மெந்தமூலமென்று விசாரித்தறி மேலும், இவ்வான்மாவானவஞ்ஞானமாயா காரியங்கள் மறைக்கப்பட்டதால் மனசுக்குப் பிரத்தியட்சமாயனுபவிக்கப்படவில்லை.

விறு- அஃதெப்படியெனின்,

விடை- மேகங்களானது சூரியனைமறைத்தது போலிந்தவான்மாவையும் அகங்காராதிவிடயங்கள்மறைக்கப்பட்டது-ஆதலால், விடயத்தைப் பிரத்தியட்சமாய்க்கண்டு அதினிடத்தில் மற்றொருவிடயத்தை யாரோபிக்கவேணுமென்றுநீகேட்டசங்கை பெரியவர்களாற் பண்ணவில்லைஇப்படிவயித்ததற்குப்பிராந்தியேகாரணம்.

விறு- அதெப்படியெனின்,

விடை- சட்சமனசுகளுக்குவிடயமன்றாயிருக்கிற ஆகாசத்தினிடத்தில் சுனுப்புமுதலானதுகள் பாலராற் கற்பிக்கப்பட்டதுபோல ஆன்மாவினிடத்திலும்புத்திப்பிரமையினால் அநான்மாதிகளைக் கற்பிக்கப்பட்டது— அநான்மாதிகளிடத்திலான்மாத்தியாசம் பண்ணுகிறதற்கு ஒருவொப்பனையும் அபேட்சிக்கவில்லை

விறு- அதெப்படியெனின்,

விடை- இந்தச் சங்குபச்சையென்கிறதிலெந்த ஒப்பனைவேணும்-இதுவன்றியுமுபாதிகளுடன் கூடின பிராந்திகளுக்குமேவொப்பனைவேணுமென்கிறது காணப்படவில்லை, நிருபாதிகளாயிருக்கிற ரச்சுமுதலான பிராந்திகள் காணப்பட்டிருக்கிறது உபாதியிற் காணப்படவில்லை— ஆனாலுங் கொஞ்சமொப்பனைகாண்பித்துச் சொல்லுகிறேன்கேட்பாயாக இவ்வான்மாவானவர் அத்தியந்தநிர்மல சூட்சமசயம்பிரகாசர் இப்படிப் புத்தியும் ஆன்மாவைப்போற்பிரகாசமானதால் ஆன்மப்பிரகாசத்துடன் புத்தியுங்கூடிநிர்மலமாய்விளங்கும்;

வினா- அதெப்படியெனின்,

விடை- சூரியன் முன்னேயிருக்கிற படிகக்கல்லானது எப்ப
டிப்பிரகாசிக்குமோ அப்படியே ஆன்மப்பிரகாசத்தினுற் பு
த்தியும் அந்தப் புத்திப்பிரகாசத்தினுல் மனமும் அந்தமன
ப்பிரகாசத்தினுலிந்திரியங்களும் அந்த இந்திரியப் பிரகாசத்
தினுல் தேகமும் விளங்கும்— ஆகையால் தேகேந்திரியாதிகளா
யிருக்கிற அனான்மாக்களிடத்தில் ஆன்மாவென்கிற புத்திகள
னுடியிற் காண்பித்த திஷ்டிப்பாலன் நிசமாகக்கண்டதுபோ
ல மூடர்களுக்கு நிசமாய்க்காணப்பட்டிருக்கிறது— அப்பா! ஆ
ன்மாவுக்கு அத்தியாசகாரணமான புத்தியினிடத்திலிப்படியா
க ஒப்பனையன்றிருக்கிறது, அனான்மாவான தேகத்தினிடத்தில்
நானென்கிற அத்தியாசமேது சொல்லப்பட்டிருக்கிறதோ அ
ந்தப் பூர்வாபூர்வ அத்தியாசத்துக்கு உத்தரோத்தர வத்தியாச
மேகாரணம்.

வினா- அதெப்படியெனின்,

விடை- சுழுத்திமூர்ச்சைகளில் நின்றுமெழுந்திருந்த பேர்க
ளில் அத்தியாசவாசனை காணப்பட்டிருக்கின்றது.

வினா- அப்படிக்காணப்பட்ட அத்தியாசத்துக்குக் காரணமே
தெனின்,

விடை- அனாதியாயிருக்கிற அவித்தைவாசனையென்றறி,

வினா- இந்த அத்தியாசபெந்தம்வந்ததற்குக்காரணமெதெனின்,

விடை- யாதொருகாரணத்தினுலோ சென்மசராமரணவியாதி
யாதிதுக்கங்களாகிற அனர்த்தங்கள் தன்னையடைந்தது,
அந்த ஆன்மாவுக்குபாதியாகிய அவித்தைக்குப் பெரிதாயி
ரண்டுசத்திகளுண்டு.

## ஆவரணவிட்சேபம்.

வினா- அவையேதெனின்,

விடை- ஆவரணசத்தி விட்சேபசத்தியென இரண்டுசத்திகளு
ண்டு இந்தச் சத்திகளுடனே கூடி ஆன்மாவுக்குச் சமுசார
பெந்தம் வந்தது. அந்தஆவரணசத்தியாலது, சத்ததாமத
குணப் பிரதானமானதா லாவரணத்துக்கேதுவாயிருந்து அதத்
தே மூலாஞ்ஞான மூலவிருளென்று சொல்லப்படும் அதனுல்
சகல செகத்து மோகிக்கப்பட்டது— அப்பா! விவேகளுயிரு
ந்தாலும் ஆன்மதத்துவத்தை நன்றாய்க் கேள்விப்பட்ட பன்

டிதனாயிருந்தாலும் ஆவரணசத்தியினால் மறைப்பட்ட கண
னுடைத் தானவன் தன்தேகத்திலிருக்கிற ஆன்மாவை யறிய
மாட்டான் விட்சேபமென்கிற ராசதசத்தியானது புருஷனு
டைய பிரவிர்த்திக்கேதுவாய் ஸ்தூலமுதல் சூட்சம வரைக்கு
முண்டான அசத்தாயிருக்கிற சகல பிரமாண்டங்களையு மான்
மாவினிடத்தில் கற்பிக்கும் — இதில் முற்சொல்லப்பட்ட ஆவர
ணசத்தியானது புருஷனாயிருக்கிறவனை நித்திரையானது சரீ
ரத்தைமறந்து போக எப்படி மூடுகிறதோ அப்படியே யிந்
தப்பிரத்தியகான்மாவை உள்ளேநின்று மறைத்துக்கொண்டு
வெளியிலிருந்த விட்சேபசத்தியைக் காட்டுவிக்கும் — இந்த
ஆவரணமென்ற பெரிதான சத்தியினால் நிர்மலமாயிருக்கிற
ஆன்மாவை மறைக்கிற போது புருஷனானவன் ஆறுபாவவி
ஸ்ம்தேகாதிகளிடத்தில் மோகத்தினால் நானென்கிற ஆன்மபுத்தி
யை வைக்கிறான்.

வினா - அதெப்படியெனின்,

விடை - நித்திரைபோகின்றவன் சொப்பனங்காண்கிற போது
பொய்யான அந்தச் சொப்பனதேகத்தில் தானென்கிறபுத்
தியை யெப்படிவைத்தானோ அப்படியே அஞ்ஞானமானவனு
டைய பிறப்பிறப்பு பசிதாகம் பிரமை முதலான தேகதர்மங்க
ளை ஆன்மாவினிடத்திற் கற்பிக்கிறான் — இப்படிக்கொத்தபுரு
ஷனானவன் விட்சேபசத்தியினால் ஏவப்பட்டு புண்ணியபாப
ரூபமான கர்மத்தைச் செய்துகொண்டு அதினால்வரப்பட்டசுக
துக்கங்களைப் பொசித்துக்கொண்டு சமுசாரசாகரத்திற் சுழலுகி
றான் — அதனால் பிரத்தியகான்மாவுக்குச் சமுசாரபெந்தமான
து அத்தியாசதோஷத்தினாற் பிரபலமாகவுண்டாயிற்று ஆனதா
ல் அந்த அத்தியாசபெந்தத்தோடேகூடிக் கெர்ப்பவாசம் பிறப்பி
றப்பு முதலான துக்கங்களினாலே யனவரதமுங்கிலேசிக்கிறான்.

வினா - அத்தியாசமாவதேதெனின்,

விடை - வஸ்துவை யவஸ்துவாகக்கிரகிக்கிறதே அத்தியாசம் இ
துபிராந்திமூலகபாவமானதால் சமுசார பெந்தத்துக்கா
திகாரணம் ஆன்மாவுக்கு அத்தியாசத்தினால் சமுசாரபெந்த
மு அந்த அத்தியாசம் போனால் சமுசாரபெந்தமில்லை ஆகை
யால் இந்தப் பெந்தமோட்சங்களிரண்டையும் நன்றாயறி.

வினா- அஃதேதெனின்,

விடை- புருஷனானவனுக்குப்பிரவிருத்தியேபெந்தம் நிவிர்த்தியேமோட்சம்இந்தப்பிரவிர்த்தி நிவிர்த்திகளினால் பெந்தமோட்சங்களுண்டாயின.

வினா- ஆன்மாவுக்கத்தியாசம்வந்ததேதுவேதெனின்,

விடை- இதுகாலகர்மாதிரூபங்கள் இவ்வத்தியாசமானது இதற்குக்கர்த்தாவாகியஈசுரனுக்குஉபாதியாகப்பரிணமித்துத்தான் பொய்யாயிருந்தும் ரச்சுவிற்சற்பம்போற்சமுசாரத்தைக்கூட்டுகிறது—சீவனைப்போலே யீசுரனுக்குபாதி கூட்டுறவு சமமாயிருந்தாலுஞ் சுத்தசத்துவமலினசத்துவமென்கிறவுபாதிபேதமானதால் சீவனுக்குப் பெந்தமேயன்றி ஈசுரனுக்குப்பெந்தமும் அதன்காரியமுமில்லை.

வினா- இதில் ஈசுரவுபாதியேது, சீவவுபாதியேதெனின்,

விடை- சுத்தசத்துவப்பிரதானமானமாயையே ஈசுரவுபாதி, மலினசத்துவப்பிரதானமானவவித்தையேசீவவுபாதி, இதில்சுத்தசத்துவப்பிரதானமான ஈசுவரனுக்குப் பெந்தமுமில்லை அதினுண்டானவிட்சேபகாரியமுமில்லை.

வினா- அஃதேதெனின்,

விடை- தமக்குஉபாதியானமாயையைத்தன்வயப்படுத்திக்கொண்டு சர்வக்ஞராயுமறைப்பில்லாத ஞானமுள்ளவராயுஞ் சஞ்சலமில்லாதபடிக்குச்சுதந்தரராயிருட்டிதிதி சங்காரப்பிரவேசங்களாகிற கிரியைகள் தன்னிச்சைக்கேற்றபடிசெய்துசததாமதங்க ளிரண்டையுந் தமக்குக் கீழ்ப்படுத்தி விளையாடிக்கொண்டிருக்கிறார்—ஆதலால் ஆவரணவிட்சேபமிரண்டுமீசுரனை யொன்றுஞ்செய்யமாட்டாது, வேதமும், ஈசுரன்றனக்குத்தானே சுதந்தரராய்ப் பிரவிர்த்திகளை யொடுக்கிக்கொண்டு மகாமகிமையைப் பொருந்தியிருக்கிறாரென்று சொல்லுகிறது, மலினசத்துவப்பிரதானமான சீவனுக்குப் பெந்தமுஞ்சமுசாரமும் பொருந்தின—இந்தச் சீவனுக்கு முன்சொல்லப் பட்ட விட்சேபங்கள மிகவுந்திரளாய்க் காணப்பட்டிருக்கிறது, இந்தச் சமுசாரத்துக்கு மூலம் விபரீதமானஅத்தியாசம்இந்தஅத்தியாசத்துக்குமூலம்ஆவரணமாகியவஞ்ஞானம்இந்தவஞ்ஞானநிவிர்த்திஞானத்தினால் தவிரக்கர்மத்தினாலாகமாட்டாது.

வினா- அதேன் கர்மத்தினால் நிவிர்த்தியாகாதெனின்,

விடை- கர்மத்துக்கும் அஞ்ஞானத்துக்கும் விரோதமில்லாததினால் கர்மமஞ்ஞானத்தைக் கெடுக்கமாட்டாது கன்மத்தினாலே ஜென்மமுங் கன்மத்தினாலே மரணமுமானதால் ஜெனனமரணரூபங்களுங் காரியங்களுக்கே — இந்தக் கன்மங்களுக்குக் கன்மவிலட்சணமான ஞானமில்லை அஞ்ஞான காரியமே கன்மமானதாலிந்தக் கன்மமும் அஞ்ஞானத்தினாலவிருத்தியடையும்— அதனினால் விருத்தியடைகிறதனா அதினால் நாசமாகாது கா ன் கன்மத்துக்கு அஞ்ஞானம் விரோதமாகாது, ஞானமே அஞ்ஞானத்துக்குவிரோதம் ஆதலால் அஞ்ஞானத்தைப் போக்கிறதற்கு ஞானமேதவிர வேறில்லையென்றறி.

வினா- அதெப்படியெனின்,

விடை- பிரகாசத்துக்குமிருட்டுக்கு மெப்படிவிரோதமோ அப்படியே ஞானத்துக்குமஞ்ஞானத்துக்கும் விரோதங்காணப்பட்டிருக்கிறது ஆனதால ஞானத்தினால் அஞ்ஞானத்தைப்போக்கிற நிமித்தம்புத்திமானாயிருக்கிறவன் ஞானத்தைச் சம்பாதிக்கவேணும் அந்த ஞானமும் ஆன்மானான்மவிவேகத்தினால் சித்திக்குமன்றி மற்றொன்றினாலுஞ்சித்தியாது.

வினா- மூடனானவன் ஞானத்தைத்தேடுகிற விதமெப்படியெனின்,

விடை- புத்தியினாலே ஆன்மாவினது அனான்மாவினது வென்று வேறுபண்ணவேணும் அப்படிவேறு பண்ணினாலான்மாவினிடத்தில் அனான்மபுத்தியாகிற முடிச்சவிழ்ந்துபோய் ஆன்மாத்துவரூபம் உண்டாகும் — இப்படியிருக்க மூடர்களாயிருக்கிற பேர்கள் வேதாந்தங்களை விசாரியாமல் தாமே பெரியவர்களென்றெண்ணிக்கொண்டு ஈசுரகடாட்சங்குருகடாட்சமில்லாதபடி, ஆன்மசொரூபத்தை நானாவிதங்களாகச் சொல்லுகிறார்கள்,

## பலமதசித்தாந்தம்.

வினா- அதேதெனின்,

விடை- அத்தியந்தபாமர மூடராயிருக்கிற பேர்கள் புத்திரனே ஆன்மாவென்றெண்ணியிருக்கிறார்கள்.

வினா- அதேதெனின்,

விடை- ஆன்மாவினிடத்தில் என்ன பிரீதியிருக்கிறதோ அது

புத்திரனிடத்தில் மிகவுங்கண்டிருப்பதாலும் புத்திரன் டே ருத்தானிவோத்தாமென்கிற அனுபவத்தினுல் ஆன்மாவே புத்திரனென்கிற சுருதியினுலுந் தீபத்தில் நின்றதீபம் பிறந்த தீபத்தைப்போல் பிதாவினிடத்தில் நின்றும் புத்திரனுண்டாகுமென ன்கிறத்தினுலுந்தகப்பன் குணங்கள் பிள்ளையினிடத்திற் பீஜா ங்குர நியாயம்போற் காணப்பட்டிருக்கிற படியினுலும் அசாந்த மூடனுயிருக்கிறவன் புத்திரனே ஆன்மாவென்றெண்ணுகிறுன் — இப்படி புத்திரனே ஆன்மாவென்கிற மதக்காரனை மற்றொரு மதக்காரன் தூஷணித்துச் சொல்லுகிறுன், புத்திரன் ஆன்மாவென்கிற தெப்படிக்கூடும் பிரீதிமாத்திரமே யல்லாமல புத்திரனெப்படி ஆன்மாவாவான் — பிரீதியோ யான்மாவாகிறபோது க்ஷேத்திரபாத்திரதனங்களிலும் பிரீதியிருக்கிறதால் அதுசகலுமான்மாவாகவேணும் அப்படியில்லாமையால் புத்திரனைக்காட்டிலும் விசேஷமாய் சகலப்பிராணிகளுக்குந் தேகத்தினிடத்தில் பிரீதிகாணப்படுகின்றது, அதுவே யான்மாவாக வேணும்.

விணு- அதெப்படியெனின்,

விடை- வீடுவேகிறபோது புத்திரன்போனுலும்போகட்டுமென்றுதன்தேகத்தைத் தப்பித்துக்கொண்டு ஓடுகிறுன் இதுவன்றியுந்தன்தேகத்தைச் சவரட்சணை பண்ணிக் கொள்கிற தற்குப்புத்திரனை விற்கின்றுன் அவன் பிரதிகூலனுய்சொல்லுகிறபோது அவனையில்சங்கரித்துப்போடுகிறுன் ஆகையால் தேகமே ஆன்மாவன்றிப புத்திரனுன்மாவாகமாட்டான், இரண்டுபாதி செய்ப்பனைகளுந்திபத்தைப்போல் புத்திரனிடத்திவிலலை.

விணு- அதெப்படியெனின்,

விடை- சகலஅவயவங்கள் பொருந்தின பிதாவினிடத்தினின்று நொண்டிமுடங் கூன்குருடாகப் பிறக்கின்றுன் நல்லசத்குணனுயிருக்கிற தகப்பனிடத்தில் துற்குணபுத்திரன் பிறக்கின்றுன் ஆனதால் நீசொன்னபுத்திரனுடாசமே — இந்த தேகமானதுகிரகத்திற்புத்திரனுக்குப்பிதாவைப்போலிருந்துக்கொண்டுசகலகாரியங்களிலும் சகலவஸ்துக்களிலும்பஜமாவத்துவுங் கண்டிருப்பதால் தேகமே யான்மாவென்று சொல்லவேண்டும் — புத்திரனே ஆன்மாவென்கிற சுருதியின் அர்த்தமுக்கியமாய்ப்புத்திரனை ஆன்மாவென்றுசொல்லவில்லை உபசாரமாகவான்மாவென்று சொல்லிற்று, மேலும், நானென்கிற அ

யிலிருக்கிற பதார்த்தத்தைத் தூக்குவிக்கிற சாமார்த்திய மெப் படியில்லையோ அப்படியே சடங்களாயிருக்கின்ற கர்மேந்திரி வாக்காதிகளுக்கு அசேதனத்துவஞ் சித்திக்கும் ஆனதாலிந் தி ரியங்களைச் சேட்டிக்கப்பண்ணுகிற பஞ்சவிருத்தியாயிருக்கி ன்ற பிராணன் அவத்தாத்திரயங்களிலுமிருப்பதாலந்தப் பிரா ணனே யான்மாவாகவேணும் — இதன்றியும் நான் பசிகொண் டேன் தாகங்கொண்டேனென்கிற அனுபவமிருக்கின்றது சுரு தியிலும் பிராணனே யான்மாவென்று சொல்லியிருப்பதால் பிராணனுக்கேயான்மத்துவமுண்டன்றி இந்திரியங்களுக்கு ஆ ன்மத்துவ மொருக்காலுங்கூடாது — என்றிப்படி சொன்னம ந்தனுடைய நிச்சயத்தை மற்றொருமதக்காரன் ஆக்ஷேபித்துச் சொல்லுகிறான், பிராணனெப்படி ஆன்மாவாகும் வெளியிலே வ திரிகிற வாயுவைப்போல் உள்ளிருந்து சஞ்சரித்துக் கொண்டு து ருத்திபோல நல்லது கெட்டதென்று மறியாதபடி சடமா வமாய்ப் பிராணன் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறது — சுழுத்தி யிற் பிராணனிருந்து மவனுக்குக் காணப்படவில்லை ஆனதா ல் [illegible] மறிந்துக் கொண்டிருக்கிறவனாயிருக் கின்ற [illegible] னே யான்மாவாகவேணுமன்றிப் பிராண ன் ஆன்மாவாகமாட்டாது,

வினா- அதெப்படியெனின்,

விடை- நான் சங்கற்பித்தேன் நான் விகற்பித்தேன் நான் சிந் தனைபொருந்தினேனென்கிற அனுபவத்தினாலும் மனோமய னே ஆன்மாவென்று சுருதி சொன்னதினாலும் மனமேதான் ஆன் மாவாகவேணும் பிராணன் ஆன்மாவல்ல, என்றிப்படிச் சொ ன்ன மனஸ்தனுடைய நிச்சயத்தை மற்றொரு ஞானமதக்கார ன் ஆக்ஷேபித்துச் சொல்லுகிறான் மனதுக்கு ஆன்மத்துவ மெப் படிக் கூடும் இந்திரியாதிகள் மனதினாலேவப்பட்டுத் தொழில் செய்கிற தெப்படியோ அப்படியே மனதுங்கர்த்தாவாகியிரு க்கிற புத்தியினால் ஏவப்பட்டுப் பிரவிருத்திக்கிறபடியினால் 'கா ரணங்களையெல்லாம் ஏவுகிறவனெவனோ அவனேயான்மாவாக வேணும் — மேலும், ஆன்மாவானவன் சுதந்தரனாகவும் புருஷ னாகவும் ஒன்றினாலே வப்படாதவனாகவுமிருக்கவேணும் ஆத லால் நான் கர்த்தா நான் போக்தா நான் சுகியென்கிற அனுபவம் புத்தியினிடத்தி லிருப்பதினால் புத்தியேயான்மா, அகங்காரத் தர்மம் புத்திதர்மமானதாலும் புத்தியாகிய விஞ்ஞான மயமே யான்மாவென்று வேதஞ்சொல்லியிருப்பதாலும் மனதைக்கா

ட்டிலுங் கர்த்தாவாய் சகலகாரியங்களுஞ்செய்து முடிக்கையா லும் புத்தியாகிய விஞ்ஞானமயனே யான்மா வாகவேணும்— என்று நிச்சயம் பண்ணின பௌத்தனுடைய மதத்தைக்கேட் டுப்பிரபாகரனுந்தார்க்கிகனும் பொறுக்கமாட்டாமல் இவனு டைய நிச்சயத்தைத் தூஷணித்துச்சொல்லுகிறார்கள், புத்தியெ ப்படி ஆன்மாவாகும் புத்தி அஞ்ஞானகாரியமாய்க் கடிநிலேதா னிறுவதனால் புத்தியான்மாவாக மாட்டாது—புத்தியாதிக ளெல் லாகாரணங்களுமஞ்ஞானத்திலேலயங்கண்டிருப்பதாலும்பா லகிருத்தர்கள் மூடன் நானொன்று மறியேனென்கிற அநுபவஞ்சொ ல்லுகிறதனாலும் அஞ்ஞானமயனே யான்மா வாகவேணு மன்றிப் புத்தியானதொருக்காலும் ஆன்மாவாகமாட்டாது—விஞ்ஞான மயனைக் காட்டிலும் ஆனந்தமயன்வேறென்றுசுருதியிற் சொ ல்லியிருக்கிறது இதன்றியுஞ் சுழுத்தியிலொருதுக்கங் களுமி ல்லாமல் சுகமாயிருப்பதாலும் ஆனந்தமயனே யான்மாவெ ன்கிறது அபிமதம்,

வினா- அதெப்படியெனின்,

விடை- புத்தியாதியிந்திரியங்களெல்லாஞ்சுழுத்தியில் அஞ்ஞான த்திலேயிலயித்திருப்பதாலு மனக்கூட்டுறவில்லாததினால் துக்கங்க ளுமில்லை யென்கிறதினாலும் தூக்கியாயிருந்தவர்களுக்குக்கூட ச்சுழுத்தியிற்சுகங்கண்டிருப்பதாலும் நானொன்றுமறியேனெ ன்கிறவநுபவங்கண்டிருப்பதாலும் அஞ்ஞானமாகிய ஆனந்த மயனே ஆன்மாவாகவேணுமன்றி விஞ்ஞானமயன் ஆன்மாவாக மாட்டான், என்று நிச்சயித்தமதஸ்தர்களைப்பாட்டமதக்காரன் மகாபிமானயோசனையினால் தூடித்துச்சொல்லுகிறான் அஞ்ஞா னமெப்படியான்மாவாகும் ஞானமுங்கூடியிருக்கவேணும் ஞா னமில்லாமற்போனால் அஞ்ஞானியென்று அஞ்ஞானத்தையெ ப்படியறிவான்—சுகமாய் நித்திரைபோனேன் ஒன்றுமறியே னென்று தன்னுடைய அஞ்ஞானமும் ஞானமும் நித்திரைதவி ர்ந்தெழுந்திருக்கிறவனிடத்திற் காணப்படுகின்றது—சுரு தியிலும் பிரஞ்ஞானகனமாயிருக்கிற ஆனந்தமயனையே ஆன் மாவென்று சொல்லியிருப்பதாலிந்த ஞானாஞ்ஞானங்கள்கூடி ன தற்கே யான்மத்துவஞ் சொல்லப்படுமன்றி அஞ்ஞானமட் டுக்குமான்மத்துவங்கூடாது.

வினா- அதேதெனின்,

விடை- ஆன்மாவானது மின்மினிப்பூச்சிபோல் சித்துஞ்சட

னும் பிரமாணாந்தரத்தினால் வாதிக்கப்பட்டுப் போனவைத்தனைப்பெரியவர்களால் யதார்த்தமாயங்கீகரிக்கப்படவில்லை ஆனதால் புத்திராதி சூனியாந்தமும் அனான்மாவென்றுன் புத்தியினால் நன்றாய்த்தெரிந்துகொள்வாயாக.

வினா- இப்படிச்சொன்னகுருவைப்பார்த்துச் சீடனானவன் கேட்கும்படி, ஐயா? சுழுத்திகாலத்தில் தேகேந்திரியாதிகள் சகலமும் லயமாய்ப்போனபோது சூனியத்தைத் தவிர வேறொன்றும் அனுபவிக்கப்படவில்லை, தேவரீர் சூனியம் ஆன்மாவல்லவென்றால் அந்தச் சூனியத்தைத் தவிர ஆன்மாவென்று வொருபதார்த்தம் வேறாயிருந்து அனுபவிக்கப்படவில்லை— அப்படியே சுழுத்தியில் ஆன்மாவிருந்தாரென்றால் ஏன் அனுபவிக்கப்படவில்லை, அவர்தாமெப்படியிருக்கிறார் இருக்கிறதற்குப்பிரமாணமென்ன, லட்சணமென்ன, அகங்காராதிகளெல்லாம் வாதிக்கப்பட்டுப் போனாலும் ஆன்மா அப்படி வாதிக்கப்படவில்லையே இப்படிக்கொத்த இருதயக்கிரந்திலட்சணமான சமுசயங்களெல்லாம் யுக்தியாகிற வாளினால் அறுத்தனுக்கிருபைகூர்ந்து அடியேனைரட்சிக்கவேணுமென்னின்.

விடை— வாராய் சீடனே நீ உன்னுடைய புத்திக்குச்சம்மதமாயிருக்கிற சூட்சுமமானசங்கையைக்கேட்டாய் அது சூட்சுமமான ரகசியம் அது சூட்சுமபுத்தியானபேர்களுக்கு யாக்கையிடத்தில் காணப்பட்டிருக்கின்றது— ஆயினும் நீ நம்மையடைந்து கேட்டனையோ அதுகளையெல்லாம் நன்றாய் உனக்குத்தெரியச் சொல்லுகிறோம் கேட்பாயாக, அதிரகசியமாகியுஞ் சிரேஷ்டமாகியுஞ் சூட்சுமமாகியுமுமூட்சுக்களினாலே அறியப்படுகிறவராகியுமிருக்கிற ஆன்மாவானவர் காரியமாயிருக்கின்ற புத்தியாதி இந்திரியங்களெல்லாந்தனக்குக்காரணமான சுழுத்தியஞ்ஞானத்தில் லயமாயிருக்கிற போது ஆலமரம் வித்திற்கானதுபடியொடுங்கியிருந்ததுபோல அவ்வியாகிருதமாயிருந்தார்— அவ்வான்மாவானவர் சாக்கிரத்தோடே கூடியிருக்கிற வேளையில் வியாகிருதனாகியும் சுழுத்தியையடைந்திருக்கிறவேளையில் அவ்வியாகிருத சொரூபமாகியுமிருக்கிறாரன்றிச் சூனியமாயில்லாமற்போகவில்லை.

வினா— அதெப்படியெனின்,

இதேது மென்கிறதன் சத்தத்தையுமறந்து மூடனானவன் தன்னையுங்கூட்டிச் சூனியமாகச்சொல்லுகிறான் — ஆகையினால்யாதொருபுருஷனுக்கும் நித்திரையிற் சகலமும் லயித்திருப்பதால்தான் ஒன்றையும் அறியாதபடி சுழுத்தி தர்மத்தையடைந்திருக்கிறான் இந்தப்புத்தியாதி இந்திரியங்களில்லாமலிருக்கிற சுழுத்தியையறிந்துக் கொண்டிருக்கிறதெதுவோ அதுவே நிர்விகாரமான ஆன்மாவென்றறி — இப்படிக் கொத்த சயஞ்சோதியான ஆன்மப்பிரகாசத்தினாற் பிரமாண்டத்தில் சூரியசந்திராதிகளும் பிண்டாண்டத்திலிருக்கிற தேகேந்திரியாதிகள் சகலமும் விளங்குகின்றது.

வினா- அதேதெனின்,

விடை- பிரகாசமான சூரியனைத் துலக்குவிக்கிறதற்கு வேறொரு பிரகாசாந்தரமான வஸ்து பூமியிலெப்படி காணவில்லையோ அப்படியே யான்மாவைத் துலக்குவிக்கிறதற்கு வேறொரு வஸ்துவுமில்லை, யாதொரு சாக்கிர சொப்பன சுழுத்திகளொன்றினாலறியப்படுகிறதோ அதுவேயான்மா, அப்படியறிந்து வருகிற ஆன்மாவை யெவைறறியப்படும்.

வினா- அதேதெனின்,

விடை- சகலத்தையுந் தகிக்கிறது அக்கினி அந்த அக்கினியைத் தகிக்கிறபதார்த்தம் வேறொன்றெப்படியில்லையோ அப்படியே சகலத்தையு மறிகிறது ஆன்மா அந்தஆன்மாவையறிகிறவன் ஒருவனுமில்லை — ஆனதால் அனுபவரூபமாய்சுயம்பிரகாசமாய்த்தானையடைந்திருக்கிற ஆன்மாவானது தன்னைவிட அறிகிறதற்குவேறெயொருஅறிவில்லாததால் தன்னாலே தன்னையறியவேணும் — திரிசியமாயிருக்கிற புத்தியாதிகளெல்லாம் சுழுத்தியில்லையமானதால் தானொருத்தனாயிருந்துக்கொண்டு ஊமவன்போலவுங் கேளாதவன்போலவும் அறியாதவன்போலவுமிருக்கிறான் இந்தச் சுழுத்திரூபமான அந்தகாரத்துக்குத்தானே சாட்சியாய்நிருவிகற்பமாய் சுகமாயிருக்கிறான் ஆதலாற்சுழுத்தியிலான்மாவுண்டென்பதிற் பிரமாணந்தானே.

வினா- அதெப்படியெனின்,

விடை- நித்திரைபோயெழுந்திருந்தவன்றனலேயே நானிருந்த நினைப்பை நினைத்துக்கொள்கிறான்.

வினா- அதேதெனின்,

விடை- யாதொருவனும் நான் சுகமாய்நித்திரைபோனேன் நா
னொன்றுமறியேனென்கிற அநுபவமே ஆன்மாவிருக்கிறதற்கு
ப்பிரமாணம்மேலும், சுழுத்தியானந்தமயமென்றும் அன்னிய
வஸ்துக்களில்லையென்றுந்தானென்கிறதில்லையென்றுஞ் சுழுத்
தியிலநுபவித்ததைஜாக்கிரத்திலே நினைத்துச்சொல்லுகிறான்.

வினா- அதேதினாலெனின்,

விடை- எவனாலே யெது அநுபவிக்கப்படுகிறதோ அவனால
தை நினைக்கவுஞ் சொல்லவுங்கூடும்—அது தவிர அன்னியனா
லநுபவித்த பதார்த்தத்தினுடைய நினைவு வேறொருத்
தனுக்குத்தோற்ற மாட்டாது ஆனதால் சுழுத்தியிலே நானெ
ன்கிற ஆன்மாவிருக்கிறதற்குப் பிரமாணமாகப் பெரியோர்க
ளாலும்பாலவிருத்தாதிகளாலும்அறியப்பட்டிருக்கிறது.

வினா- இதற்கடையாளமேதெனின்,

விடை- முன்னிருந்த நினைப்பே பின்னும் வருகிறது, சுகமா
ய் நித்திரைபோனேனென்கிறதே அடையாளம், பூர்வமொ
ன்றை யநுபவித்ததில்லாமற் போனால் பின்பு முன்பநுப
வித்த நினைப்புப்பிறக்கமாட்டாதென்கிற யுக்திகளும் ஆன்மாவு
ண்டென்பதிற்பிரமாணம்—மாண்டூக்கிய வுபநிடத்திலும் ஆ
ன்மாவானவர் நித்திரையிலொருகாமியங்களுங் கோரவில்லை, அ
வர் பிரஞ்ஞானகனனாய் ஆனந்தமயனாய் ஆனந்தபோக்தாவாயி
ருக்கிறாரென்றுசொன்னதால்சுழுத்தியில்ஆன்மாவிருக்கிறாரெ
ன்பதிற்சந்தேகமில்லை.

வினா- சுழுத்தியென்பதேதெனின்,

விடை- ஆன்மாவானதொன்றுங்கோராதபடி சொப்பனமுமி
ல்லாதபடியிருக்கிறதேசுழுத்தி அந்தச்சுழுத்தியில் ஆன்மாவி
ருக்கிறாரென்றுசுருதியாதிகளில்சொல்லப்பட்டிருப்பதால்ஆ
ன்மாஅழியாமல்சுழுத்தியிலிருக்கிறதற்குச் சாஸ்திரங்களேபிர
மாணம்—அநுபவத்திலும் சுழுத்தியிலொன்றுங்கோராதபடி
சொப்பனத்தையுங் காணாதபடி யிருந்தோமென்கிற தற்குத்
தானில்லாவிட்டால் இதுகள்கூடாது ஆகையால் ஆன்மாவிருக்கிறா
ரென்று அநுபவிக்கப்பட்டது, இதற்குமுன் சாட்சிப்பிரமா
ணங்களாய்ச் சொன்னசுருதி சாஸ்திரங்களினால் ஆன்மாவை

தாலும் ஆன்மா நிட்களமாகையாலும் லயமில்லை, லயமில்லாமையால் ஆன்மா நித்தியமென்றறி.

வி - சித்தாவதேதெனில்,

விடை - ஜடமாயிருக்கிற பிரபஞ்சத்தைத் துலக்குவிக்கிற சூரியன்பிரகாச சொரூபமன்றி ஜடசுபாவமெப்படியில்லையோ அப்படியே புத்தியாகிய ஜடத்தைத் துலக்குவிக்கிற ஆன்மாசித்ரூபமென்றறி — ஜடங்களாயிருக்கிற சீவர்கள் முதலான பதார்த்தங்களுடைய துலக்கத்துக்குச் சூரியாதிப்பிரபையைத் தவிரவேறிடத்திலுஞ் சுதாதுலக்கமெப்படியில்லையோ அப்படியே புத்தியிந்திரியதேகாதிகளுக்குஞ் சுதாதுலக்கமில்லை ஆதலால்யாதொருசிற்பிரகாசத்தைத்தொட்டு இந்தத் தேகேந்திரியாதிகள் விளங்குமோ அதுவேசின்மயசொரூபம் அப்படிக்கொத்தசின்மய சொரூபத்தைச் சுருதிசம்மதமாகத் த்ருஷ்டாந்தத்தில் ஜடபதார்த்தங்களுக்குச் சூரியனெப்படியோ அப்படியே தாஷ்டாந்தத்திலும் புத்தியாதிகளைத் துலக்குவிக்கிற ஆன்மாசின்மயமென்றேசொல்லுகிறது — அப்படி சூரியனானவன் தன்னைத் துலக்குவிக்கிறதிலும் தனக்கன்னியமான பிரபஞ்சத்தைத் துலக்குவிக்கிறதிலுந் தன்னைத்தவிர வேறேயொரு அன்னியப்பிரகாசத்தை யெப்படி யபேக்ஷிக்கவில்லையோ அப்படியே ஆன்மாவுந்தன்னைத் துலக்குவிக்கிறதிலுந் தனக்கன்னியமான தேகேந்திரியாதிகளைத் துலக்குவிக்கிறதிலுங் காரணமாவது சின்மயமென்றேயறி — ஆன்மப் பிரகாசமானது வேறொரு பிரகாசங்களை அபேக்ஷிக்கவில்லை.

வி - அதேதெனின்,

விடை - தன்னுடையபிரகாசத்தினால் தானேவிளங்குகிற சுயஞ்சோதியாகையால் இச்செகத்ரூபமான ஆன்மாவிற்குப் பரப்பிரகாசத்தை அபேக்ஷிக்கத்தேவையில்லை — ஆகையால் அந்தச் சிவப்பிரகாசத்தைச் சந்திரசூரியாக்கினி மின்முதலானதுகள் எள்ளளவாகிலுந் துலக்குவிக்கமாட்டாது இந்தச்சந்திர சூரியாதியாகிய செகத்துஞ் சித்ரூபப்பிரகாசத்தினாலே விளங்கப்பட்டுக் கொண்டு வருகிறது ஆதலால் இவ்வான்மாவே பாலியாதிசாக்கிராதிசகலாவத்தைகளிலுமிருக்கின்றதென்றறி — இவ்வான்மாவுடைய சொரூபியானதா ஸானந்த பரிபூரணமேதன்னுடையலட்சணம்.

வி - அதெப்படியெனின்

விடை- தனக்கன்னியமாகியபதார்த்தங்களிடத்திலேயுஞ்சுகமென்றுபிரீதிவைப்பதாலான்மா சுகவேதுக்களாயிருக்கிற சகல விஷயங்களிலும்அவதியோடேகூடினவானந்தங்காணப்பட்டிருக்கிறது ஆன்மாஆனந்தமானால்ஒருக்காலு மவதியில்லாததானதால் அந்தப்பிரமானந்தமேதன்னுடைய ஆனந்தமென்றறி

வினா- அதெப்படியெனின்,

விடை- பிராணிகளுக்கு இந்திரிய நஷ்டமாகியுந்தேக சீரணமாகியும் பிராணன்போகிற தருணத்திலின்னம் பிழைத்துக்கொள்வோமென்கிற வாசையிருப்பதா லான்மா பிரியவத்துவென்பதிற் சந்தேகமில்லை—ஆகையால் சகல சரீரங்களுக்கும்ஆன்மாபரமானந்தசொரூபம், யாதொருஆனந்தத்தினால் சகல விடயானந்தங்களும் பிறக்குமோ அந்தவிடயானந்தங்களும் ஆன்மானந்தத்தைத்தவிரவேறில்லை ஆதலால் ஆன்மா சுகசொரூபமென்றேயறி-புத்திரதனாதிகளைக்காட்டிலும் அன்னியமானதே கேத்திரியாதிகளைக்காட்டிலும் ஆன்மாப்பிரியவஸ்துவாகையால்ஆன்மாபரமானந்தசொரூபியென்றறி, உலகத்தில் ஆபத்துசம்பத்துக்களிரண்டினாலும் பிரியமாயிருக்கிறவஸ்துபிரியமாயிருக்குமே தவிர வொருக்காலும் அப்பிரியமாகமாட்டாது அதுபோல ஆன்மாவொருக்காலும் அப்பிரிய வஸ்துவல்லவென்றறி—சகலப்பிராணிகளுக்கும்ஆன்மா அதிகப்பிரியவஸ்துவேதவிர அப்பிரியவஸ்துவலல.

வினா- அதேதெனின்,

விடை- புத்திரமித்திரகளத்திராதிகளையும் தனதான்னிய முதலாகிய பதார்த்தங்களையுங்கிரகாதிவியாபாரம்உழவுபசுக்கள் சம்ரட்சணைராஜசேவைமுதலாகியகிரியையாதிகளையும்ஆன்மசுகத்தை இச்சித்தேயிச்சித்திருக்கிறார்கள்—பிரவிர்த்தி நிவிர்த்திமுதலாகிய தொழில்களெல்லாந்தன் சுகத்துக்கே தவிர அன்னியனுக்காகச்செய்யவில்லை ஆகையால்ஆன்மாபரமசுகசொரூபியென்றறி—வாராய் சீஷனே முன்சொன்ன ஆன்மா ஆனந்தசொரூபியானதால்சகலவஸ்துக்களைக்காட்டிலும் சிரேஷ்டமென்று சொல்லப்பட்டது, யாதாமொருத்தனிப்போது நாம் சொன்ன ஆனந்தசொரூபமான ஆன்மாவைத் தவிரஆனந்தம் வேறேயொன்றிருக்குமென்றெண்ணுகிறானோ அவன்சகலதுக்கத்தையுமடைவானென்றறி,

து வெளியிலிருக்கிற விடயசுகத்தின் பொருட்டு நிசமாயெத்தனம் பண்ணுகிறார்கள் சந்தேகமில்லை—உலகத்தில் தனக்கிஷ்டமானவஸ்துவைக்கிரகிக்கிறதிற் சகலசனங்களுக்குந் தோற்றுகிற வானந்தமெதுவோ அவ்வானந்தம் வஸ்துவினுடைய தெருழிலேயல்லாதுமனதிற் காணோம் வஸ்துதர்மமானால் மனதிலெப்படித் தோற்றும்—மனதுக்கு அன்னியமான வஸ்துவினுடையதர்மம் மனதில்தோற்றுமென்பதெங்குங்காணோம்.

வினா- ஆனால்அந்தவஸ்துதர்மந்தானானந்தமோவெனின்,

விடை- அஃதுஞ்சடரூபமானதால்அதற்கும்ஆனந்தமென்பதுகூடாது.

வினா- ஆனால்மனதினுடையதர்மந்தானானந்தமோவெனின்,

விடை- மனதுஞ் சடரூபமானதால்மனதுக்கும்ஆனந்த மென்பது கூடாது ஆதலாற்சுகஞ்சடதர்மமென்கிறதுவோரிடத்திலுங்காணவில்லை அனுபவிக்கப்படவுமில்லை.

வினா- ஆனால்ஆன்மாவினுடையதர்மம்ஆனந்தமோவெனின்,

விடை- ஆன்மாகுணமில்லாமல் நிற்குணமானபடியினால் ஆன்மாவேறென்பதும் ஆனந்தம் வேறென்பதுங் கூடாது ஆகையால் ஆனந்தமேயான்மாவென்றறி—பூர்வபுண்ணியபலத்தினாலிட்டவஸ்துக்களைப்பார்க்குமிடத்தில் சுத்தசாத்துவிதம் பொருந்தின சித்தத்தில் சொச்சதிரவியமான சலத்திற் பிரவிம்பிக்கிற சந்திரனைப்போல ஆனந்த லட்சணமான ஆன்மாப்பிரதி விம்பிக்கின்றது—மேலும், அந்தச்சித்தத்திற் பிரதிவிம்பிக்கிற ஆபாசானந்தமானது மிகுந்தபுண்ணிய பலத்தினாலுங் குறைந்தபுண்ணிய பலத்தினாலும்மிகுந்துங்குறைந்துங்காணப்படும்—சுருதியில் சார்வபௌமானந்த முதல் பிரமானந்தம்வரையில்யாதோரானந்தங்கள்தாரதம்மியமாயிருக்குமோ அவ்வானந்தங்களதிசயமாகவுமுடிவில் அழிந்துபோவதாகவுமிருக்கின்றதாகையால் அவ்வானந்தங்கள் புண்ணிய சாதனமாய் வருகிற விடயானந்தங்கள்அதுகள் புண்ணியம்பண்ணுகிறபேர்களால்பொசிக்கப் படுகிறது இப்படிப் பொசிக்கப் படுகிற விடயானந்தமானது பொசிக்கிற போதும் பொசியாமலிருக்கிறபோதுந் துக்கத்தையேகொடுக்குமென்று சொல்லப்படுகின்றது.

வினா- அதெப்படியெனின்.

விடை- விடங்கலந்தஅன்னத்தைப் புசிக்கிறகாலத்திலும் புசித்தபிறகுந் துக்கத்தையேகொடுக்குமன்றிச் சுகத்தைக்கொடுக்கமாட்டாது அதுபோலஉலகத்தில் பிரமாதிபோகங்களையடைந்த புருஷர்களுக்கும் போகாந்தரத்திலே அழிந்துபோகின்றதுக்கமிருக்கும் — இதுவன்றியும்ராஜசன்னிதானத்திற்போகின்ற மந்திரிதளவாய்பிரதானிகளுக்கு ஒருவர்க்கொருவர்தாரதம்மிய பேதமெப்படியோ அப்படியே பிரமாதிபேதங்களையடைகிற ஜெந்துக்களுக்குந் தாரதம்மியமானதுக்கமிருக்கும் — ஆதலால் விவேகியானபேர்கள் பிரதிபிம்பமாயிருக்கிற விஷயானந்தங்களை ஆசிரயிக்காமல் பிம்பபூதமாயிருக்கிற ஆனந்த லட்சணமான ஆன்மாவை ஆசிரயிக்கவேணும் இந்தப்பிம்பபூதமான ஆனந்தம் சாசுவதம் தொய்தமில்லாது அத்துவைதம், நித்தியம், ஏகம், நிர்ப்பயம் என்றுசொல்லப்படும், இதில்பிரதிபிம்பமாயிருக்கின்ற ஆபாசானந்தமும் அந்தப்பிம்பானந்தம்போலவேகாணப்படுகின்றது.

வினா- அதேதெனின்,

விடை- பிரதிபிம்பானந்தமானது, பிம்பானந்தமூலமாகையாலும் பிம்பானந்தத்தைத்தவிரப் பிரதிபிம்பானந்தஞ் சித்தியாதாகையாலும்பிம்பானந்தம்போல்பிரதிபிம்பானந்தமுங் காணப்படுகின்றது அந்தநிர்விகாரமான பிம்பானந்தத்தையும்விகாரமான பிரதிபிம்பானந்தத்தில் ஆனந்தமென்று காணப்படுகின்றது — ஆகையால் பெரியவர்களாயிருக்கிற பேர்களாலும்புத்தியினால்சாக்கிரசொப்பனங்களிலொருக்காலும் ஆன்மானந்தத்தையனுபவிக்கப்படவில்லை.

வினா- அதேதினாலெனின்,

விடை- அவித்தியாகாரியமான தேகேந்திரிய கரணக்கூட்டுறவினால் ஆனந்தசொரூபமான ஆன்மாசாக்கிரசொப்பனங்களிற் காணப்படவில்லை-இந்தத்துக்கரூபமானசாக்கிர சொப்பனங்களாகிய துலக்ஷணங்கள் சுழுத்தியில்லையாகையால் பிரத்தியகானந்த லட்சணமான ஆன்மானந்தஞ் சுழுத்தியிற் காணப்படுகின்றது — அந்தச் சுழுத்தியிற் புத்திமுதலாகிய கருவிகரணாதிகளொன்றுமில்லாததால் ஆன்மா கேவலானந்தமாத்திரமாய்த் தன்னைவிட அன்னியமில்லாத அத்துவைதமாயிரு

க்கின்ற வைதநித்திரைதவிர்ந்தெழுந்த சகலசனங்களாலும் ஆன்மாசுகமென்றுகாண்கிறார்கள் ஆகையால் ஆன்மாஆனந்த சொரூபமென்பதிற் சந்தேகந்தேவையில்லை — அப்பா! நித்திரை தவிர்ந்தெழுந்திருந்த உன்னாலும் சுகமாய் நித்திரைபோனேனென்கிற நினைவிருக்கையால் ஆன்மா சுகசொரூபியென்றும் உபநிடதார்த்த வாசனையை ஆகிராணியாதபடிக் கிருக்கிற ஸ்ரீஷ்வாதிகளினால் துக்கமில்லை அதே சுகமென்றுசொன்ன உபசாரமானவார்த்தையைச் சுத்தப்பொய்யென்றும்அறியவாயாக.

வினா- அதேதெனின்.

விடை- துக்கமில்லாமை, ஓடுமுதலான துகளிற் காணப்பட்டிருக்கின்றது அவற்றிலானந்தங்காணப்படவில்லை ஆகையால்அந்தயுக்திகூடாது, ஆன்மாகேவலானந்தமென்பதில்நீசந்தேகப்படத்தேவையில்லை, பிரமாதியாகிய சகலசெந்துக்களுந்தங்கள் தங்களுபாதியனுகுணமாய் ஆனந்தலட்சணமானவேலைத்தை அனுசரித்துக்கொண்டு ஆனந்திகளாயிருக்கிறார்கள் — இந்தஆனந்தப்பிம்பானந்தமூலமென்பதிற்சந்தேகந்தேவையில்லை.

வினா- அதெப்படியெனின்,

விடை- ஒருவன்பட்சணங்களிற் சுகத்தைக்கொடுக்கிற மதுரமானரசத்தை ருசிபார்க்கிறான்அந்த ரசமானது வெல்லத்தினுடைய மதுரமல்லாமல் பட்சணங்களுடைய மதுரமல்ல அப்படியே விடயசந்நிதானத்திலே யாதோரானந்தந் தோன்றுகின்றதோ அது பிம்பானந்தப்பிரகாசமன்றிச் சடமானவிடயானந்த மல்ல வென்றறி — யாதொருத்தனுக்கு எந்தெந்த விடயங்களோடே கூடுகிறபோது எந்தெந்த ஆனந்தங்காண்கிறதோ அந்தவானந்தம் பரப்பிரமானந்தமே பிரகாசிக்கிறதென்றறி.

வினா- அதெப்படியெனின்,

விடை- சந்திரப்பிரகாசத்தினால் ஆம்பல்புஷ்பமெப்படி மலர்கின்றதோஅப்படியேஆன்மானந்தத்தினால்விடயானந்தம் பிரகாசிக்கின்றதென்றறி — இப்போதுசொல்லிவந்தசத்துச்சித்தானந்தரூபத்துவம் ஆன்மாவுக்குச்சுபாவமேதவிர அன்னியமில்லை.

வினா- அதேதெனின்,

விடை- ஆன்மாநிர்க்குணமானதால்நிற்குணத்திற்குக்குணமேது

ருக்காலுங்கூடாது-இதுவன்றியும் ஆன்மாவைத்தவிர அன்னியவஸ்து நிசமாயிருந்தால் அதனால் ஆன்மா தன்ரூபங்கெடும் அப்படியில்லாமலன்னியவஸ்துவாகியபிரபஞ்சம் பொய்யாய்ப்போகின்றபடியினால் ஆன்மா ஒருக்காலுந் தன்ரூபங்கெடுகிறவல்ல, சுருதியில்கேவலனென்றும் நிர்க்குணனென்றுஞ் சொல்லியிருப்பதால் ஆன்மாவுக்கு ஒருகுணமுங்கூடாது--ஆகையால் அக்கினிக்குச்சுபாவம் உஷ்ணப்பிரகாசங்களெப்படியோ அப்படியே யான்மாவுக்குச் சத்துச்சித்தானந்த மென்றுஞ் சுபாவமென்றறி—இப்படிக்கொத்த அத்துவைதமாகிய பரமான்மாவினிடத்தில்சுசாதிகவிசாதிகபேதமுமில்லை-

வினா- அதேதெனின்,

விடை- விசாதிகமாய்க்காணுகிற பிரபஞ்சந் தள்ளப்படுகிறபடியினால் ஆன்மாவினிடத்தில் விசாதிகாதிபேதங் காணப்படவில்லை, அஃதெப்படியென்றால் ரச்சுவைத்துக்கு விபரீதமான சற்பகுணமெப்படிதள்ளப்படுகின்றதோ அப்படியே சத்தினிடத்தில் தோற்றிய செகத்தைத்தள்ளிச் சன்மாத்திரமாய்க்காணப்படுகிற தேதுவுண்டோ அதைஅபவாத மென்று அத்துவைதத்தை யறிந்தபெரியவர்களாற் சொல்லப்பட்டிருக்கின்றது—இப்படி சூட்சம புத்திகளாயிருக்கிற பேர்களால் பிரபஞ்சத்தினுடைய வுற்பத்திச் சத்தாயிருக்கிற பிரமத்தினிடத்தில் விளங்குகின்றதென்று அறிந்திருக்கையால் பிரபஞ்சஞ்சன்மாத்திரமென்றுயுத்தியினாலறி—மேலும் நால்வகையோனியிற்பிறந்த தூலசரீரங்களும் அதுகளின் போசிப்புக்குயோக்கியமான அன்னபானாதிகளும் அதற்கிருப்பிடமான இந்தச்சகல பிரமாண்டங்களும் பஞ்சீகிருதமான தூலபஞ்சபூதமென்றேயறி—இந்தப்பிரபஞ்சமானது, பிரமத்தினுடைய காரியமாய்க்காணப்பட்டபடியினால் இதைவிசாரிக்கிறபோது மண்ணின் காரியமானகடாசராவாதிகள்மண்ணைத்தவிரவேறாகாததுபோல் பிரமமாத்திரமாய்க்காணப்படுகின்றது.

வினா- அதேதெனின்,

விடை- அந்தக்கடாசராவாதிகளையுள்ளும் புறம்பும்நன்றாய்விசாரித்துப்பார்க்கிறபோது மிருத்திகையைத்தவிரக் கடாதிகளில்லைஆகையாலிந்தக்கடம் கழுத்தோடேகூடிவாய்குவிந்திருக்கிறதென்றுசொல்லக்காரியமில்லைஇதுவுஞ்சொன்மாத்திரமேயல்லாதுமிருத்திகையைத்தவிரவேறில்லை—இந்தக் கடாசராவாதி

லௌகிகமென்றும் சார்வமென்றும் நாமரூபபேதமாக மூடர்களாலே யொருமண்ணைத்தானெப்படிச்சொல்லப் பட்டிருக்கின்றதோ அதுகள் நாமரூபபேதமேதவிர விசாரிக்கிறபோது அவஸ்துபேதமில்லை அதுபோல் பிரமகாரியமாயிருக்கப்பட்டதான் வைதேயாணிகளாகிய சகலபூதஉபாதிகளென்கிற பிரபஞ்சமும் பிரமத்தைத்தவிர வேறில்லை, காரணத்தைவிடகாரியமொருக்காலும் பேதமில்லாததுபோல் தோற்றப்பட்ட இந்தச் சகலத்துக்கும் பிரமத்துக்கும் பேதமில்லையென்றறி.

விறு- அதெப்படியெனின்,

விடை- தன்தன் குணமான சத்ததாதுக்களோடேகூடின பஞ்சீகருத பூதங்களானசரீரங்களும் பஞ்சீகிருதபூதகாரியமான சூட்சுமசரீரங்களும் சத்துவாதிகுணங்களோடேகூடி இதுகளுக்குக்காரணமான அவ்வியத்தமாத்திரமாய் ஆன்மாபாசத்துடன் கூடிவிளங்குகின்றது — இப்படி விளங்கப்பட்ட சரீரத்திரயங்களுக்கு ஆதார பூதமாய்கண்ட மாயருதியாய்ச் சுத்த மாயெகமாய்சத்தாயிருக்கிற பரப்பிரமவஸ்துவைத் தவிரச் சரீரத்திரயவிகற்பங்களில்லை — அப்பா? ஒருபுருஷனுக்கு நேத்திரதோஷத்தினால் ஒருசந்திரனிரண்டா யெப்படி காணப்படுகின்றதோ அப்படியே ஒன்றாயிருக்கிற பிரமமும் புத்திதோஷத்தினால் பின்னபின்னமாய்க் காணப்படுகின்றது அந்த நேத்திரதோஷமில்லாதவர்களுக்குச் சந்திரனொன்றாயெப்படிக்காணகின்றதோ அப்படிபுத்திமுதலான தோஷரகிதர்களுக்குப்பிரமமொன்றாய்க்காணப்படும் — பழுதையினிடத்தில் பாம்பென்றுபிரமித்தவன் தீபங்கொண்டுவந்து பழுதையைப் பார்த்ததின்பின்பு பாம்பென்கிற புத்திபழுதையினிடத்திலேயிபடிலயமாச்சுதோ அப்படியேபிரமத்தினிடத்தில் பிரமையினால் பிரபஞ்சத்தைக்கண்டவன் குருவேதாந்த ரகசியங்களினால் பிரமானுபவத்தைக்கண்டுபிரமைதீர்ந்தாலவனுக்குப் பிரபஞ்சம் பிரமத்தினிடத்தில் ஐக்கியம் — இப்படிபிராந்தியினால் பிறந்ததொய்த்தபுத்தியானதொழிந்து போகிறபோது சத்தாய் அத்துவிதமாய்ப்பரப்பிரமவஸ்துவேகமாயிருப்பதால் நிர்விகற்பமான பிரமத்தினிடத்தில் விசாதிகபேதமில்லை யென்றறி — உபாதியான மாயாவித்தைகளுள்ளபோது அபின்னமாயிருக்கின்றஆன்மாவானவர் சுசாதிகபேதம்போல் தோற்றுகிறார் அந்த உபாதிகளைச் சொப்பனம் போற்பொய்யென்று அறிந்து

போது அந்த உபாதி தோற்றவில்லாதபடியினால் இந்த ஆன்மாவுஞ் சாதிகபேதமில்லாமல் பிரமப்பிரதிபாதகமாகவிருக்கும்.

வினா- அதெப்படியெனின்,

விடை- கடாகாசமானது கடமுடைந்தபோது மகாகாசத்துடன் கடாகாசமென்கிறது போயொன்றானதுபோல ஸ்தூலசூக்ஷும உபாதிகளெல்லாமொழிந்தபோது ஆன்மா பிரமமாகவேயிருப்பானென்றறி—கடமிருந்தபோதுங் கடமில்லாதபோதும் மகாகாசமெப்படியொன்றாயிருக்குமோ அப்படியே உபாதியிருந்தபோது மில்லாதபோதும் பரிபூரணமாயிருக்கிற ஆன்மா வொன்றே தவிரப் பின்னமென்று ஒருவராலுஞ் சொல்லக்கூடாது.

வினா- அதேதெனின்,

விடை- மண்ணைத்தவிர வேறில்லாதிருக்கிற கடாதிகள் பாமரராயிருக்கிற பேர்களுக்குப் பேதமாகக் காணப்படுவதுபோலவும் ஒருவனே பிதாவென்றும் புத்திரனென்றும் எப்படிப் பின்னமாய்த் தோற்றுகின்றதோ அப்படிபோலவும் ஏகத்துவமாயிருக்கின்ற பரப்பிரமவஸ்து பிரமையினால் கற்பிக்கப்பட்ட வஸ்துக்களோடே கூடிப் பரிச்சின்னமாகவே தோற்றுகின்றது, அந்தப் பிரமையைத் தவிர்த்தாலொழிய ஒருக்காலும் ஆன்மாவுக்குப் பேதமென்கிறதில்லை ஆதலால் ஆன்மா பரிபூரணர் பின்னமென்பதொருக்காலுங்கூடாது —பிரமத்திற்கும் ஆன்மாவுக்கும் அடிக்கடி பேதங்கற்பிதமேதவிர வாஸ்தவமல்ல, சுருதியிலும் பிரமத்துக்கும் ஆன்மாவுக்கும் ஐக்கியந்திரளாய்ச் சொல்லியிருக்கிறது.

வினா- அதேதெனின்.

விடை- சாமவேதோபநிடதத்தில் உத்தாலகர் சுவேதகேதுவுக்கு அத்தொப்தத்துவம் பொருந்தவேண்டித் தத்துவமசியென்கிற வாக்கியமுபதேசித்திருக்கின்றார் அதையுனக்குச் சொல்லுகிறேன் சாவதானமாய்க்கேள், அந்த உபதேசவாக்கியம் வாச்சியார்த்தமென்றும் லெட்சியார்த்தமென்றும் இரண்டுவிதமாயிருக்கும் அதில் வாச்சியார்த்தமானது பிரத்தியட்சவிரோதமாகையால் வாச்சியார்த்தங்களுக்கையிக்கியங்கூடாது, அவ்விரோதங்களெல்லாமொழிந்த தத்துவபதார்த்தங்களுடைய லெட்சியார்த்தங்களுக்கே ஐயிக்கியங்கூடும்.

வினா- என்றிப்படிசொன்ன குருவைப்பார்த்து சீஷன் கேட்கும்படி, சுவாமீ! தத்துவபதங்களுடைய அர்த்தமெத்தனைவிதம்

வாச்சியார்த்தமாவதென்ன? லட்சியார்த்தமாவதென்ன? வாச்சியார்த்தத்துக்குஐயிக்கியங்கூடுகிறபோது அந்தவிரோதமெப்படியில்லாமற்போகும்? தத்துவமசியென்கிற வாக்கியத்திற்குலெட்சியார்த்தமான சீவப்பிரமாயிக்கங்கூடுகிறதில் எந்தலட்சணை சொல்லப்பட்டிருக்கின்றது? இது களைக்கருணையினால் அடியேனுக்குநன்றாய்த்தெரியச்சொல்லவேணுமெனின்,

விடை— வாராய் சித்துவானாயிருக்கிற சிஷனே இன்றைக்குன்னுடையதபசானது நிறைவேறியது இந்தவாக்கியார்த்த சிரவணத்தினால்மகா நல்லஞானமுண்டாம் இந்தத்தத்துவபதங்களுடைய அர்த்தத்தைத்தெரிந்து விசாரியாதபடியெவ்வளவுகாலமிருக்கிறார்களோ அவ்வளவுகாலமும் அந்த மனுஷர்களுக்குச்செனன மரணரூபமான சம்சாரசாகரமுண்டு—ஆகலால் சற்புருஷர்களுக்குச்சச்சிதானந்த அகண்டாகாசரூபாவஸ்தையான இந்தவாக்கியார்த்தசிரவணத்தினாலுண்டான அபரோட்சஞானத்தினால்மோட்சசாதனஞ்சித்திக்கும். முமுட்சுவாயிருக்கிறபுருஷனானவன் செனனபந்த மொழிவதின்பொருட்டு இந்தவாக்கியத்தை நன்றாயறியவேணும் ஆகையால் நீயுஞ்சாவதானமாய்க்கேள் உனக்குத்தெரியும்படி நன்றாய்ச்சொல்லுகிறோம்.

வினா— அதேதெனின்,

விடை— மகாவாக்கியங்களுக்கு வாச்சியார்த்த லெட்சியார்த்தபேதமாக அர்த்தங்கள்வெகுவிதங்களாய்ப் பெரியவர்களால் சொல்லப்பட்டிருக்கின்றது அதைஉனக்குச்சொல்லுகிறோங்கேளீ.—தத்துவமசியென்கிறவாக்கியத்தில் தத்தொம் அசியென்றுமூன்றுபதமாயிருக்கும் அதில்முந்தினபதமானதத்பதார்த்தத்தினுடைய அர்த்தமிங்கேசொல்லுகிறோம்.

வினா— அதேதெனின்,

விடை— சாஸ்திரார்த்தங்களை யுணர்ந்தபெரியவர்களால் தற்பதவாச்சியார்த்தமென்றுந்தற்பதலட்சியார்த்தமென்றுஞ் சொல்லப்படும் அதில்பெரியோர்களாற் சொல்லப்பட்ட வாச்சியார்த்தத்தைமுந்திச்சொல்லுகிறோம்.

வினா— அதெப்படியெனின்,

விடை— சத்துவகுணமிகுத்துச்சித்ப்பிரதிபிம்பத்தோடே கூடிச்சமஷ்டிரூபவஞ்ஞானமாகிறஆகாசாதிவிராட்புருஷனந்தமானகாரியத்துடன் கூடினபிரதிபிம்பாவிச் சின்ன சைத

ஸ்வரியமானது சச்சிதானந்த லட்சணத்தைப்பொருந்தியுஞ் சர்வஞ்ஞத்துவமீசாத்துவம் அந்தரியாமித்துவமாகிய குணங்களோடேகூடிக்கொண்டிருக்கிறதாயுஞ் சிருட்டிஸ்திதி சங்காரதர்மங்களுடன் கூடினதாயுஞ் சகலப்பிரபஞ்சத்தையுந் தனக்குளிக்கிறதாயுங்குணங்களினால் எண்ணத்தொலையாததாயு மிருக்கின்றது, அந்த அவ்வியக்தமான பிரமமேவாச்சியார்த்த மென்றுசொல்லப்படும் இனிசுருதிசம்பந்தமாய்ச் சொல்லப்பட்டிருக்கிற தற்பதலட்சியார்த்தத்தைச் சொல்லுகின்றோம்.

வினா- எப்படியெனின்,

விடை- சத்தபரிசரூபரசகந்தங்களில்லாததாயும் வாக்கினால்வசனிக்கப்படாததாயும்மனதினால் எண்ணப்படாததாயும்பாணியினால் கிரகிக்கப்படாததாயு மொன்றினாலுந் தள்ளப்படாததாயும் ஒருதொழிலினுமெட்டாததாயும் ஆன்மாவேயெலட்சணமாய்ப்பொருந்தினதாயும் அனந்தமாயுநித்தியாதீதமாயுஞ் சத்துவாதிகுணங்களில்லாததாயும்விலட்சணமாயும்பிராந்தியினால்ஆரோபிக்கப்பட்டவஸ்துக்களுக்கு அதிட்டானமாயுஞ்சத்தாயும்அத்வைதமாயுஞ்சுத்தபுத்தமுக்தகலானந்த லட்சணமாயுமிருக்கின்றநிர்விசேஷபரப்பிரமமேதற்பதலட்சியார்த்தமென்றுசொல்லப்படும்- இனித்தொம் பதத்துக்கும்வாச்சியார்த்தலட்சியார்த்தமென்று இரண்டுவிதமாய்ச் சொல்லப்பட்டதில்தொம்பதவாச்சியார்த்தத்தைமுந்திச்சொல்லுகின்றோம்.

வினா- அதேதெனின்,

விடை- மலினசத்துவம் பொருந்திச் சித்பிரதிபிம் பத்துடனேகூடிப்புத்திமுதல் தூலசரீராந்தமாய்க் காரியகாரணலட்சணமாகியவியஷ்டிரூபமான அவித்தையிற்பிரதிவிம்பித்துச்சீவனென்கிற பேரைப்பொருந்தியும்- சட்பாவவிகாரங்களுடன்கூடிநான்பாலன் நான்குமாரன் நான்யௌவனன் நான்பெருத்தேன் நான்இறந்தேனென்கிற தூலசரீரதன்மங்களுடனேகூடியும் பசிதாகசோகமோகஜராமரணமான சடூர்மிகளைப்பொருந்தியும் நானூமைசெவிடன் குருடன்மூக்கிறையன் நான்போகிறேன்வருகிறேனென்கிற இந்திரியதர்மங்களுடனேகூடியும் காமம்சங்கற்பம்பொறுமை சந்தோஷம் பயம்கவலை மறதி இதுமுதலானமனோதர்மங்களுடன்கூடியும்— நான் கர்த்தா நான்போக்தா நான் சுகி நான் துக்கியென்கிற ஆங்காரதர்மங்களுடன்கூடியுந் திரிகரணத்தினாற் பண்ணப்பட்ட புண்ணிய பாவபலபோக

த்திநின்பொருட்டுச் சொர்க்காதிகளையடைந்து அநித்தியமா
ன சுகதுக்கங்களைத் தன்னுடைய கர்மத்துக்கீடாய்ப் புசித்
துக்கொண்டு பிரமைமேயாமே கூடின புருஷர்களையே தொம்
பதவாச்சியார்த்தமென்று சொல்லப்படும் — இனி, தொம்பதல
ட்சியார்த்தத்தைச் சொல்லக்கேட்பாயாக.

வினா- அதெப்படியெனின்,

விடை- அவித்தியாலட்சணமான தேகேந்திரியகரணமனோபு
த்திப்பிராணஅகங்காரரூபமான வடாதிகளில் ஒட்டாததாயு
ம்மனேகரந்திரங்களுடையபாத்திரத்திலிருக்கிற ஓர்மாணிக்கக்
கல்லானது அதுகளையெப்படி துலக்குவிக்கின்றதோ அப்
படியே இந்தப் பிராணேந்திரியாதி தேகத்துக்குள்ளே சோதி
யாயிருந்து துலக்குவித்துக்கொண்டு அந்தத் தேகாவஸ்தைகளுக்
கெல்லாஞ்சாட்சியாய் பிரத்தியகான்மாவாயுந்தேகேந்திரியவியா
பாரங்களைப்பார்த்துக்கொண்டிருக்கிறதாயும் அறிகிறதாயுமேக
மாயுஞ்சத்தியமாயும் நிர்விகாரமாயும் பூரணமாயுஞ் சூட்சும
மாயுஞ்சர்வப்பிரகாசமாயுந்தடஸ்தமாயுங் கூடஸ்தமாயுமிருக்கி
ற ஆன்மாவே தொம்பதத்துக்கு லட்சியார்த்தமென்றுசொல்
லப்படும் அப்பா! தத்துவபதங்களுடைய அர்த்தம் இப்படி
சொல்லப்பட்டது இனிவாக்கியார்த்தத்தினுடைய நிர்ணயத்
தைச்சொல்லுகிறோம்.

## வாக்கியநிர்ணயம்.

வினா- அதேதெனின்,

விடை- தத்துவமசியென்கிறவாக்கியமானது சம்பந்தத்திரயங்
களுடன் கூடியிருந்தால்தத்துவபதார்த்தங்களிரண்டுக்கும்
அசிபதத்தினால் ஐக்கியங்கூட்டக்கூடும்.

வினா- அந்தச்சம்பந்தத்திரயங்களேதெனின்,

விடை- சாமானாதிகரண்ய சம்பந்தமென்றும் விசேஷண வி
சேஷியபாவசம்பந்தமென்றும் லட்சியலட்சணபாவசம்பந்த
மென்றுமூன்றுவிதம், அதில்தற்பதந் தொம்பதங்களிரண்டி
க்குஞ்சாமானாதிகரண்ய சம்பந்தமென்றுந்தற்பத தொம்பதா
ர்த்தங்களாயிருக்கிற ஜீவேசுவரர்களுக்கு விசேஷண விசேஷியபாவ
சம்பந்தமென்றும் அதிஷ்டானமானபிரத்தியகான்மா பரமான்
மாக்களுக்குலட்சியலட்சணபாவசம்பந்தமென்றும் அறிஞர்க
ளாற்சொல்லப்படும்.

வினா- இதில்சாமானாதிகரண்யசம்பந்தமாவதேதெனின்,

விடை- பரோட்சத்துவமுதலான தர்மங்களுடன் கூடி
ன்னிய மெனுவோ, பிரத்தியட்சத்துவாதி தர்மங்கள்
த்தினையசதன்யமெனுவோ அவ்விரண்டுக்குந் தத்துவபதங்க
ளிருதல் அயிக்கங்கூட்டுகிறதே சாமானாதிகரண்யசம்பந்த மெ
ன்று சொல்லுகிறார்கள்— தற்பதார்த்தமான அபரோட்சத்து
வாதி தர்மங்களுடன் கூடின சித்துக்கும் த்வம்பதார்த்தமான அ
பரோட்சத்வாதி தர்மங்களுடன் கூடின சித்துக்கும் ஒன்றுக்
கொன்றுபேதமாயிருக்கிற வாக்கியார்த்தத்தைத்தள்ளிக்கொண்டி
த்திடமாகவிசேஷணவிசேஷியதாசம்பந்தங் காணப்பட்டிருக்
கிறது— தத்துவபதார்த்தங்களிரண்டுக்குமயிக்கங் கூட்டுகிறதி
ல்விருத்தாங்கிசமெது காணப்பட்டிருக்குமோ அந்தவிரோதத்
தைத்தள்ளி அவிருத்தமாயிருக்கின்ற சித்தோடேயிக்கியதைக்கூட்டு
கிறதேலட்சியலட்சணபாவசம்பந்தமென்று பெரியோர்களால்
சொல்லப்பட்டிருக்கின்றது.

வினா- இதில்விருத்தாங்கிசங்களைத்தள்ளுகிறதற்கு விசேஷண
விசேஷியதா சம்பந்தங்காணப்பட்டிருப்பதேதெனின்,

விடை- நீலோற்பலமென்கிறபோது வாக்கியார்த்தசங்கதி யெப
ப்படிக் காணப்பட்டிருக்கின்றதோ அப்படியே தத்துவம
சியென்கிறபோது வாக்கியார்த்தசங்கதி கூடாது.

வினா- அதேதெனின்,

விடை- நீலத்துவம்பட்டத்தைவிட்டு நீங்கிவிசேடமாயுற்பலத்தி
ல் கூடினதுபோல்தத்துவபதங்களிலும்அன்னியோன்னியா
பேதத்தைத்தள்ளி விசேஷண விசேஷியத்துவமொரு பிரகார
மாய்க்கூடுகிறது— ஆதலால்அந்தவிசேஷண விசேஷியத்துவம்
நீலோற்பலமென்கிறவாக்கியத்தில் பொருந்தினதுபோல்தத்
துவமசியென்கிறவாக்கியத்திற்பொருந்தாது,

வினா- அதெப்படியெனின்,

விடை- வாக்கியார்த்தமாயிருக்கிற தத்துவபதங்களில் பிரத்தி
யட்ச பரோட்சத்துவாதி விரோதங்காணப்பட்டிருக்கின்ற
து ஆதலால்கூடாது.

வினா- அந்தவிரோததர்மமேதெனின்,

விடை- தத்பதார்த்தமாயிருக்கிற ஈசுரனிடத்தில் சர்வஞ்ஞத்துவம் சர்வேசுரத்துவஞ் சர்வோத்தமத்துவம் சத்தியகாமத்துவம் சத்தியசங்கல்பத்துவம் பரோட்சத்துவ முதலானதுகள் காணப்பட்டிருக்கின்றது தொம்பதார்த்தத்தில் ஜீவத்துவங்கிஞ்சிஞ்ஞத்துவந் துக்கஜீவனத்துவம் அவித்தியாவசத்துவ மிந்தவிரோதங்கள் காணப்பட்டிருக்கின்றது- ஆகையால் அந்தவிருத்ததர்மங்களைப் பொருந்தினதத்துவபதார்த்தங்களாகிற ஜீவேசுரருக்கு ஏகத்துவமெப்படிக்கூடும்— ஜீவேசுராளிரண்டு பேரும் அப்படியொருவர்க்கொருவர் விருத்ததர்மங்களுடன் கூடியொருத்தருக்கொருத்தர் விலட்சணமாய்ப்பனியும் நெருப்பும் போலிருப்பதாலிவர்களுக்கு முக்கியமாயயிக்கியங்கூட்டுகிறபோது சுருதிஸ்மிருதிவிரோதமும்வரும்— சுருதியானதுஇந்தத்துவ பதார்த்தங்களுக்கு அபேதமென்னு அயிக்கியத்தைத் தாற்பரியமாய்ச் சொல்லியிருப்பதால் அந்தச்சுருதி வசனத்தை அங்கீகாரம்பண்ணவேணும்— இப்படிவாக்கியார்த்தங்களை அங்கீகரிப்போமென்றால் ஒன்றுக்கொன்றுவிருத்த மிருப்பதால்அங்கீகரிக்கக்கூடாது ஆகையால்லட்சணையை அங்கீகரிக்கவேண்டியிருக்கின்றது.

வி௫- அதேதெனின்,

விடை- விட்டலக்கணையென்றும் விடாதலக்கணையென்றும்விட்டும்விடாதலக்கணையென்றும் திரிவிதமாயிருக்கும்.

வி௫- ஆனால் விட்டலக்கணையாகிய கெங்காயாங்கோஷப்பிரதிவசதியென்கிறதினால் தத்துவபதார்த்தத்துக்கு அயிக்கங்கூட்டலாமோவெனின்,

விடை- முக்கியமாயிருக்கிறகங்காசலத்தைத் தள்ளிக்கரையைக்குறிக்கையாலும் தத்துவமசியென்கிறவாக்கியத்திற்கு அப்படியொன்றைவிட்டொன்றைக்குறிப்பதில்லாமல்அயிக்கியம்படிவதாலும் விட்டலக்கணையினால் அயிக்கங்கூட்டப்படாது

வி௫- சோணத்திஷ்டோசுவேதோதாவதியென்கிற விடாதலக்கணையைக்கொண்டு அயிக்கங்கூடுமோவெனின்,

விடை- சிவலையும்வெள்ளையும்போகின்றதென்றுபொதுவசனமாய்ச்சொன்னதேதவிர இன்னதென்றுகுறித்துச்சொல்லாததால்விடாதலக்கணையினாலும் அயிக்கங்கூடாது.

வி௫- பின்னையெதினால் தான் அயிக்கங்கூடுமெனின்,

விடை— சுயந்தேவதத்தனென்கிறதில்விட்டுவிடாத லக்ஷணையி
னால் அயிக்கமெப்படிக்கூடுமோ அப்படியே தத்துவமஸி
யென்கிற வாக்கியத்துக்கும் அயிக்கங்கூடும்.

விஞா— அதெப்படியெனின்,

விடை— சுயந்தேவதத்தனென்கிறவாக்கியார்த்தந்தேவதத்தனி
டத்தில்முன்காணப்பட்டதனாத்தனம் தன்னட்டைகமுதலான
துகளும் அப்போதிவனுண்டதேசகாலமுதலானதுகளும்பி
ன்புசுயம்பாகியாயிருக்கிற போதுண்டானசட்டுமுதலான
துகளுமிப்போதிருந்த தேசகாலமுதலானதுகளுமொன்று
க்கொன்று விருத்தமானதாலிவ்விரண்டு விரோதத்தையுந்த
ள்ளியத்தத்தேவதத்தனுடைய சரீரமாத்திரமர்த்தமாகக்கொ
ண்டு அவனேயிவன் இவனேயவனென்று அயிக்கப்படுவது
போல் தத்துவமஸியென்கிறதில் தற்பதவாச்சியார்த்தமாகி
ய சர்வஞ்ஞத்துவ பரோக்ஷத்துவ முதலானவிருத்தாம்சத்தை
யுந்தொம்பதவாச்சியார்த்தமாகிய கிஞ்சிக்ஞத்துவமுதலான
விருத்தாம்சத்தையுந் தள்ளித்தற்பத லக்ஷியார்த்தமாகிய
சின்மாத்திரமான பரமான்மாவுக்குந் தொம்பத லக்ஷியார்த்
தமாகிய சின்மாத்திரமான பிரத்தியகான்மாவுக்கும் அசிபத
த்தினால் அனுவேதியானுயென்று அயிக்கங்கூடும்— இப்படி
லக்ஷணையினால் அயிக்கானுபவமாய்க் கூட்டப்பட்டசொரூபஞ்சு
ரீவோபாதிகளை யொழிந்ததாயுஞ்சச்சிதானந்தமாகியும் அத்
வைதமாகியும் நிர்விசேடமாகியும் நிராபாசமாகியும்வாக்கினுல்
அப்படிக்கொத்ததிப்படிக்கொத்த தென்றுவமானமாய்ச்சொ
ல்லப்படாததாகியு மொன்றைக்கொண்டு காட்டப்படாததாகி
யும் ஆனந்தமாகியுஞ்சாந்தமாகியுமச்சுதமாகியும் அதர்க்கிய
மாகியும் அபிஞேயமாகியும்நிற்குணமாகியும் அகண்டைகரசப்
பிரமமாகியுமிருந்ததே அசிபதாயிக்கானுபவமாம் அப்பா! தத்
துவபதலக்ஷியார்த்தானான பிரத்தியகான்மாப் பிரமங்களுக்கு ஏக
த்துவம் பொருந்துகிறதற்கு உபாதிவிசேஷங்களில் விரோதங்
காணப்பட்டிருக்கின்றது, இப்படிக்காணப்பட்டிருக்கின்ற உ
பாதிவிசேடங்களைத்தள்ளுகிறபோது தத்துவபதார்த்தானாம பி
ரத்தியகான்மாப்பிரமாயிக்கத்துக்கு ஒருவிரோதமுமில்லை— இந்
தப்பிரத்தியகான்மா பரமான்மாவாகிற இரண்டுபேரிடத்திலுமு
பாதியுமுபாதிகளுடையகூட்டுறவும்உபாதி செய்கிறதொழிலை
களுந்தொழில்களின்விலட்சணமும்பிரமையினுற்பவிக்கப்பட்
டதாயிருக்கின்றசகலப் பிரபஞ்சமும் கற்பிதமானதால் பொய்

யாய்ச் சொப்பனத்திற் கண்டபொருள்போல் சாக்கிரத்திலு
ம் சத்தியமாய்க் காணப்படுகின்றது—நித்திரையினால் உண்
டானசொப்பன சரீரதரிசங்களான சுகதுக்காதிப் பிரபஞ்சங்க
ளுஞ் சீவேசுராதி பேதங்களுஞ் சத்தியமென்று நிசம்பண்ணு
கைக்கும் ஒருக்காலுங்கூடாது.

வினா- அதெப்படியெனின்,

விடை- மாயையினால் கற்பிக்கப்பட்டதேசகால ஜெகதீசராதி
ரூபஞ்சலான பிரமைகளும் அந்தச்சொப்பனம்போலப் பொய்
யானதால் அதில் கற்பிதமான சீவேசுராளிரண்டு பேரினு
மென்மெய்ப்பனவன் பொரியன் ஆகையாலிருவரும்பொ
ய்யேயாம்—சொப்பன சாக்கிரங்களான இரண்டவஸ்தையிலு
ம் பிராந்தியினால் உண்டான விகற்பங்களினுந் செட்டிறதொ
ழில் கனோத்தாரதன் பியமாய்க்காணவேண்டாம்.

வினா- அதெப்படியெனின்,

விடை- சொப்பனத்தில் ஒருவிடயத்தைக்காண்கிறதுங்கண்ட
விடயமுமெப்படிப் பொய்யாய்ப் போகுமோ அப்படி
யே சாக்கிரத்திலே கண்டதுங் காணப்பட்ட விடயமும்
பொய்யென்றறி—இந்தச்சாக்கிர சொப்பனங்களிரண்டும்
அவித்தியா காரியமானபடியினால் சொப்பனம்போலவே
சாக்கிரமுமாம்.

வினா- அதெப்படியெனின்,

விடை- காண்பானுங்காண்பனவுங்காட்சியுமாகிய திரிபுடி சா
க்கிர சொப்பனங்களிரண்டிக்குஞ் சரியானதாலிரண்டிக்குந்
தாரதம்மிய பேதமில்லை யென்றறி—சுழுத்தியில் சொப்
பன சாக்கிரங்களில்லாதது எல்லாராலும் அனுபவிக்கப் படுகி
ன்றது ஆதலாலிந்தச் சாக்கிர சொப்பனங்களிரண்டும் பொய்
யானதால் இவ்விரண்டிக்கும்பேதமில்லை—வாராய்விவேகியான
சீடனே பிரமத்தினிடத்திற் சுசாதிசாதிலட்சணபேதம் பிராந்
தியினால் கற்பிக்கப்பட்டிருக்கின்றது அதுகாலத்திரயங்களிலு
ம்பரமார்த்தமாகவில்லை யென்றறி—எசுர்வேதத்தில் பிரகதாரு
ண்யவுபநிடதத்தில் சனகனுக்குறித் துயாஞவற்க்கமகாரிஷி
யானவர்சச்சிதானந்தத்தைத் தவிரவேறே யன்னியமொன்றுங்

காணப்படவுமில்லை, கேட்கவுமில்லை ருசி கொள்ளவுமில்லை யெ
ன்றும் பிரமத்துக்கு அன்னியமானவஸ்து ஒன்றுமில்லை யெ
ன்றும் தொய்த்தை நிஷேதிக்கிறார் ஆகலால் பிரமத்தில் கற்பி
தமான செகத்காகிற பிரமைபோய் யென்றறி—பிரமத்துக்க
ன்னியமெல்லாங் கற்பிதமானதால் பிரமம் சதா அத்துவிதம் ச
கலவிகல்பசூனியம் நிருபாதிகம் நிருமலம் நிரந்தரானந்தகன
ம் நிரதிசயமாயிருக்கின்ற சொரூபமொன்றென்றறி—ஆகலால்
இந்தப்பிரமத்தைத்தவிர வேறே யன்னியமாயொரு வஸ்துவுமி
ல்லை, குணத்தோற்றரவுமில்லாமல் வாக்குப்பிரவிர்த்தியு மில்லா
மல் மனப்பிரவிர்த்தியு மில்லாமலிருக்கிற கேவலமாய்ப் பிரம
சாந்தமாய் அனந்தமாய் ஆனந்தமாத்திரமாய் சதா அத்தொய்த
மாயிருக்கிற பிரமமாத்திரமாய்க் காண்கிற தென்றறி—வாராய்
சீடனே இப்போதுனக்குச்சொன்ன தத்துவமானது சத்திய
சச்சிதானந்தாத்மக சராமரணமற்ற நித்தியமான வஸ்து எ
துவோ அதுவே நீயாவாய் நம்முடைய வசனத்தைச் சத்தியமாக
வெண்ணிக்கொள்—நீ அன்னமயகோசமான தூலதேகமு மல்ல
பிராணனுமல்ல, இந்திரியங்களுமல்ல, வாக்குமல்ல, மனமுமல
ல்ல, புத்தியுமல்ல, அகங்காரமுமல்ல, இந்தத் தேகேந்திரியாதி
கூட்டுறவுமல்ல, ஆகலால் அந்தத்தேகேந்திரியமனபுத்தியகங்
காராதிகளெல்லாவற்றையுந் தனக்குவித்துக்கொண்டு அதுகளுக்
கெல்லாஞ்சாட்சியாயிருக்கிற யாதொரு சுயம்பிரகாசமான வ
ஸ்துவுண்டோ அதுவே நீயாவாய் உலகத்தில் யாதொருவஸ்து
பிறக்கின்றதோ அந்தவஸ்துவே விர்த்தியடைகிறது அக்காலம் வ
ந்தபோது அழிந்துபோகிறதுமாயிருக்கும் உனக்குப்பிறப்பு
மிறப்புமில்லை இந்தப்பிறப்பிறப்புஇரண்டுமில்லாததால் நீநி
த்தியனென்றறி—இந்தத்தேகமானது யாதொன்று பிறந்த
தோ அதுவே விர்த்தியடைந்து கர்மக்ஷயத்தினால் நாசமடை
யும் நீயாவிந்தப்பிறப்பு வளர்ப்பு முதலாகிய அவத்தைகளி
லும் இருந்து இந்த அவத்தைகளெல்லாமறிந்துக்கொண்டிருக்
கிற அவிகாரியசாட்சியே நீயாவாய்—சுயம்பிரகாசமாய் சகலாத்
துமகமாகியுஞ்சாக்கிராதி அவத்தைகளிலும் அகம்அகமென்றழி
யாமலனுபவிக்கப்பட்டு விளங்கியும் புத்திமுதலான சமஸ்தவி
காரங்களிலும் அவிகாரமாயிருந்துக் கொண்டு அந்தவிகாரங்க

ணையறிந்திருக்கிற பிரமமெதுவோ அந்தக்கேவல ஞானமாத்திர சொரூபமே நீயாகும் — உள்ளும்புறம்புங்கண்ட ஞானமெதுவோ அதுவேமூடபுத்திகளுக்கு ஆரோபித நாமரூபப் பிரபஞ்சம் போலக்காண்கின்றது.

வினா- அதெப்படியெனின்,

விடை- மிருத்திகையேகடசராவாதிகள் போலவும் விசாரிக்கிலந்தமிருத்திகை நிர்விகாரமாயிருக்கிற தெப்படியோ அப்படியே சகலவிகாரங்களு மற்றுத்தன்னிலே காணப்படுங் கேவலபோதமாத்திரமான யாதொருபிரமமுண்டோ அதுவே நீயாகும்—அழிவில்லாதபடி சுத்தஞான மாகிய ஆன்மசொருபத்தினிடத்தில் கற்பிதமான ஆகாசாதிபஞ்ச பூதங்களுக் கெல்லாஞ் சிரத்தையைக் கொடுத்துக்கொண்டு தன்னுடைய பிரகாசமகிமையினால்சகலத்தையுமறிந்துக்கொண்டு கேவலஞானமாத்திரமானபிரமமெதுவோ அதுவே நீயாகும் — நிருமலமான அந்தக்கரணத்தைப்பொருந்தித் திடசமாதியில் இருந்தபெரியவர்களாலுங் கரைகாணுதிருக்கிற ஆனந்தத்தைப் பிரத்தியட்சமாகக்கண்டு பரமாம் சக்கூட்டங்களினால் சந்தோஷிப்பட்டிருக்கிற கேவலஞானமாத்திரமான பிரம சொரூப மெதுவோ அதுவே நீயாகும்—சுருதியில் அவ்வியமென்றும் அபார மென்றும் அனந்தமென்றும் அமித்தியமென்றும் அவ்வியத்தமென்றும் அட்சர மென்றும் அநாசிரய மென்றும் அப்பிரமேயமென்றும் ஆனந்தமென்றும் அசற்கனமென்றும் அஜமயமென்றும் அத்துவித மென்றுஞ் சொல்லப்பட்ட கேவலபோதமாத்திரமான பிரமமெதுவோ அதுவே நீயாகும்—ஏராய்கூடனே சொரூபமாகிய உன்னிடத்தில் சரீரத்தோடேகூட்டுறவும் அந்தச்சரீரத்தினுடைய தொழில்களும் பிராந்தியினலேயாரோபிக்கப்பட்டிருக்கின்றது, பரமார்த்தமாய் விசாரிக்கு மிடத்தில் இவ்வாரோபங்களொள்ளளவு முன்னிடத்திலில்லை ஆகலால் உன்னைப்பிராணனுகப் பார்த்துக்கொண்டு மிருத்தியுவினுடைய பயத்தைவிட்டுவிடு — பிராந்தியினலே யாரோபிக்கப்பட்டயாதொருதேகாதிப்பிரபஞ்சங்களையும் பிரபஞ்சமாகத்தானே பார்த்துப்பிராந்தியைத்தள்ளிவஸ்து திருஷ்டியாய்ப்பார்க்குமிடத்தில்அந்தவஸ்துவே நீயாகும்உன்னைத்தவிர வேறே அ

யேகாரணமான மூலாஞ்ஞானத்துக்கு நாசம்வரும்போது அநாதியமாயிருக்கிறதேகாதிப் பிரபஞ்சத்துக்கு நாசம்வருமென்றதி— இப்பிரபை யானது சூரியனை யெப்படித்துலக்குவிக்கமாட்டாதோ அப்படியே அந்தக்கரண கற்பிதமான சிதாபாசன்சுயம்பிரகாசமாயிருக்கிற பரப்பிரமத்தைத் துலக்குவிக்கமாட்டான்.

வினா- அதேதெனின்,

விடை- பிரசண்டகிரணங்களுடன் கூடிய சூரியனானவர் பிரகாசிக்கும்போது இப்பிரபையானது தன்னுடைய வொளிகெட்டு அந்தச்சூரியகிரணத்தில் எப்படி அடங்கிப் போகிறதோ அப்படியே சிதாபாசனும் பரப்பிரமப் பிரகாசத்தினால் தன்னுடைய பிரகாசங்கெட்டுத்தானும் உபாதியோடே கூடமெலினமைப்போவதால் ஆன்மாவைத் துலக்குவிக்கமாட்டான் ஆகலால் பிம்பபூதமான பரப்பிரமமே சேடித்திருக்குமென்றதி— உபாதியான அந்தக்கரணம்போகிறபோது அதிற்பிரதிபிம்பித்த ஆபாசனும் அதிட்டானமாத்திரமாயிருப்பன்.

வினா- அதெப்படியெனின்,

விடை- முகத்துக்கெதிராகக் காண்பித்த கண்ணாடியை வாங்கிவிடும்போது அந்தக்கண்ணாடியில் காண்பித்த ஆபாசமுகமானது போய்யதார்த்த முகமாயெப்படிக் கண்டதோ அப்படியேயுபாதியழிகிறபோது அதிற்பிரதிபிம்பாபாசனும் அதிட்டான மாத்திரமாயிருப்பனென்றதி.

வினா- இந்தச்சிதாபாசனானவன் அந்தக்கரணவிருத்தியிற் கூடிவெளியிலிருக்கிற கடத்தையறிகிறபோது அந்தக்கடாஞ்ஞானத்தைப்போக்கிக்கடத்தைத் துலக்குவித்ததுபோல உள்ளேயிருக்கிற சுயம்பிரகாசமானபிரத்தியான்மாவைத் துலக்குவிப்பனோவெனின்,

விடை- சிதாபாசனானவன் பலவியாப்தியானதால் பிரத்தியகான்மாவைத் துலக்குவிக்கமாட்டான்— ஆகலால் பிரத்தியகான்மாவை யறிகிறதற்கு அந்தக்கரணவிருத்திவியாப்திக்கவேணுமே தவிரப்பலமான சிதாபாசவியாப்தி தேவையில்லை— சுருதிகளிலும் மனதினால் அறியப்படாதென்கிற பலவியாப்தியும் சொல்லியிருப்பதால் நன்றாய்ப் பகுத்தறிந்து சூட்சமபுத்தியினாற் பிரமத்தை யறியவேணும்— எவன் பிரஞ்

ஞாமாந்தமாயிருக்கிறவனுக்குச், சுருதியைக் கேட்டமாத்திரத்தினால் அகண்டாகாரவிருத்தி பிறக்கமாட்டாது, சிரவணமனன நிருத்தியாசனங்கள் யாதொருத்தன் நிரந்தரஞ்செய்து வருகிறானோ அவனுக்கே டுத்திரூட்சமமாகும், அதனாலவன் ரூட்சமலவஸ்துவையறிந்துகொள்வான் — ஆதலால் அந்தப் பிரந்ஞாமாந்திகளாயிருக்கிறவர்கள் பரப்பிரமவஸ்துவை நன்றாய் அறிகிறதின் பொருட்டுச்சிரவணமனன நிருத்தியாசனங்களைச் செய்யவேணும்.

## ஷட்லிங்கதாத்பரியம்.

வினா- அதேதெனின்,

விடை- சகலவேதாந்தவாக்கியங்களுக்குஞ்சரிதாகவும் அத்வைதமாகவுமிருக்கிற பரப்பிரமத்தினிடத்தில் ஷட்விதலிங்கங்களால் தாத்பரிய நிச்சயம்பண்ணுவதே சிரவணமென்று சொல்லப்படும்.

வினா- அவையாதெனின்,

விடை- உபக்கிரமஉபசங்காரமிரண்டுமொரோலிங்கம், அப்பியாசமிரண்டாம்லிங்கம், அபூர்வதை மூன்றாம்லிங்கம், பலம் நாலாம்லிங்கம், அர்த்தவாதம் அஞ்சாம் லிங்கம், உற்பத்தி ஆறாம்லிங்கமென்று சொல்லப்படும்.

வினா- இதில்உபக்கிரமஉபசங்காரமாவதேதெனின்,

விடை-உபக்கிரமமாவது சச்சிதானந்தஅகண்டமாயிருக்கிறபரப்பிரமசொரூபத்தினிடத்தில்அத்தியாரோபமாகஇந்தச்சகலஸ்துபிரமாண்டபிண்டாண்டங்களாகியஜகத்துண்டாயிற்று, இந்தச்செகத்தாகியசிருஷ்டியாகிறதற்குமுன் பிரமம் சத்தாமாத்திரமாகவேயிருந்ததென்று பிரதிவாதிக்கிறதும், உபசங்காரமாவது இந்த உற்பத்தியானசகல ஜெகத்தும்அபவாதக்கிரமமாயொடுங்குகையாலிந்தப்பிரமாண்டபிண்டாண்டமென்கிறஉபாதியிற்கூடஸ்தபிரமங்களுக்கு அந்தஉபாதியையொழித்துஏகத்துவயிக்கியத்தைக்கூறப்படுகிறதுமாம்.

வினா- அப்பியாசமாவதேதெனின்,

விடை- நீயேபரப்பிரமம் நீயேபரப்பிரமமென்றுஒன்பதுபிரகாரமாகவுபதேசிக்கையாலும்அதுவேதன்னைக்கூட்டிச்சொல்வதாலும் சேதனனுடைய சொரூபத்துக்கே அத்துவைதஆன்மத்துவம்போதிக்கிறதாலும் அப்பியாசமென்றுசொல்லப்படும்.

லயினுச்சியில் விட்டதயிலதாரை போல் இடைவிடாமல் அகண்டாகாரவிருத்திகளினால் நிரந்தரத்தியானம்பண்ணுறதே நிதித்தியாசனமென்று சொல்லப்படும்—யாதொருத்தனுக்குக்கேள்வியான சிரவணத்திற்சமுசயமெவ்வளவுகாலந்தீரவில்லையோ அதுவரைக்குஞ்சிரவணம்பண்ணவேணும்—சிரவணம்பண்ணி நிச்சயித்தசொரூபத்தில் சமுசயமெவ்வளவுகாலந் தீரவில்லையோ அவ்வளவுகாலஞ் சுருதியுத்திகளினால்மனனம்பண்ணவேண்டும்-தேகமேநானென்கிற விபரீத பாவனையானது மனதில் எவ்வளவுகாலம் நாசமடையவில்லையோ அவ்வளவுகாலம்மோட்சம்வேணுமென்றிச்சித்தவன் நிரந்தரத்தியானம் பண்ணவேணும்—அபரோட்ச சாட்சாத்காரத்தில் குதர்க்கங்களுடன் கூடின திரிவியப்பிரபஞ்சமானது எந்தமட்டும் நாசமடையவில்லையோ அதுவரைக்குமஞ்ஞானந்தன்னுடனாது, ஆதலால் மோட்சத்திலே யிச்சையுள்ளவன் தியானசமாதிகளை அவசியஞ்செய்யவேணும்.

வினா- தியானசமாதியாவதேதெனின்,

விடை- சவிகல்பசமாதியென்றும் நிர்விகல்ப சமாதியென்றும் இரண்டுவிதமாகவிருக்கும் அதில் சவிகல்ப சமாதிலட்சணத்தைமுந்திச்சொல்லுகிறேன்கேட்பாயாக.

வினா- அதேதெனின்,

விடை- ஞாதுருஞானஞேயங்களான திரிபுடிக்குமிலயமில்லாமல் ஞேயமாகியகேவல பரப்பிரமவஸ்துவினிடத்தில் நிலைத்துள்ள பிரமாகாரமாயிருக்கிற சித்தவிருத்தியே சவிகல்பசமாதியென்று பெரியவர்களால் அறியப்பட்டிருக்கின்றது—ஆதலால் அந்தஞாதுருஞானஞேயமாயிருக்கிற திரிபுடியுஞ்ஞேயமாத்திரமாயிருக்கிற சத்தாகியபரப்பிரமத்தினிடத்தில் அசத்தாய்விளங்குகின்றது.

வினா- அதெப்படியெனின்,

விடை- மிருத்திகையினால் பண்ணப் பட்ட பானையானது மிருத்திகையாயிருந்தும்பார்க்கிறபேர்களுக்குப்பானையென்றெப்படித்தோற்றப்பட்டதோ அப்படியே ஞாதுருஞானஞேயமான திரிபுடியுஞ்சன்மாத்திரமானபரப்பிரமவஸ்துவினிடத்தில்சன்மாத்திரமாகவேவிளங்குகின்றது ஆதலால் இப்போது சொல்லப்பட்டசமாதிக்குச் சவிகல்பமென்று சொல்லப்ப

று அகங்காரமுதலான காமாதிகள் திரிசியமென்றறி—இந்தக்காமாதி சகலவிருத்திகளையும் அதிகாரியாகப்பார்க்கிறசாட்சியானதன்னைப்பார்க்கிறவன் திட்டிரியனாகவேயிருப்பான், காமாதிவிருத்திகளுக்கெல்லாம் நான்சாட்சி என்றால் இந்த விருத்திகள் காணப்படுகிறதென்று தன்னைச் சாட்சியாக அறிந்தவன் சாட்சியாகவேயிருப்பான்—திரிசியமாகவிருக்கிற சகலகாமாதிப்பிரபஞ்சத்தையும் ஆன்மாவாயிருக்கிற தன்னிடத்திலே லயம்பண்ணவேணும்.

வினா— அதற்கனுபவமேதெனின்,

விடை—தேகம்நானல்ல, இந்திரியம்நானல்ல, பிராணனுநானல்ல, அகங்காரமனோபுத்திகளும் நானல்ல, இந்தத்தேகேந்திரியப்பிராணமனோபுத்தியகங்காராதிவிகாரங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டுச்சாட்சியாய் நித்தியனாயிருக்கிறபிரத்தியகான்மாவே நானேன், [illegible]ளுக்குச்சாட்சியாகியும்பிராணவிருத்திக்குச்சாட்சியாகியும் புத்திவிருத்திக்குச்சாட்சியாகியும் சட்சுச்ரோத்திராதிஇந்திரியங்களுடைய கிரியைகளுக்குச்சாட்சியாகியும் நித்தியமாகியுமிருக்கிறபிரத்தியகான்மாவே நானேன், நான் ஆணுமல்ல, நானிருடனுமல்ல, இளைஞனுமல்ல, பாலனுமல்ல, எவ்வனனுமல்ல, விருத்தனுமல்ல, உடைமையுமல்ல, மூக்கறையனுமல்ல, நொண்டியுமல்ல இவைகளுக்கெல்லாஞ்சாட்சியாய் சத்தியமாயிருக்கிறபிரத்தியகான்மசொரூபமேநானேன்—நான் வந்தவனுமல்ல, போனவனுமல்ல, கொன்றவனுமல்ல, கொல்லப்பட்டவனுமல்ல, கர்த்தாவுமல்ல, செய்கிறவனுமல்ல, சொல்லப்படுகிறவனுமல்ல, சுகியுமல்ல, துக்கியுமல்ல, இவைகளுக்கெல்லாஞ்சாட்சியாயிருக்கிற பிரத்தியகான்மாவேநானேன், நான் யோகியுமல்ல, வியோகியுமல்ல, ராகியுமல்ல, பாபியுமல்ல, குரோதியுமல்ல, லோபியுமல்ல, பந்தனுமல்ல, முத்தனுமல்ல, இவைகளுக்கெல்லாஞ் சாட்சியாயிருக்கிற பிரத்தியகான்மாவே நானேன், நான் உட்பிரஞ்ஞனுமல்ல, வெளிப்பிரஞ்ஞனுமல்ல, பிரஞ்ஞனுமல்ல, அப்பிரஞ்ஞனுமல்ல, சிரவணப்படுகிறவனுமல்ல, மனனப்படுகிறவனுமல்ல, அறியப்படுகிறவனுமல்ல, சாட்சியாய் நித்தியனாயிருக்கிறபிரத்தியகான்மாவே நானேன்—எனக்கித்தத்தேகேந்திரியாதிகளுடைய கூட்டுறவுமில்லை, புண்ணியபாவமில

ஷமுமில்லை, பசிதாகமுதலிய ஷடூர்மிகளுக்கும் அப்படிப்பட்டு
ச்சதாவிமுத்தமான கேவலசித்துருபமேநானென்று, என்றிப்ப
டித்தன்னுடையசொருபத்தைத்தானே கண்டுகொண்டு காணப்
பட்டதிரிபுடியையெல்லாந்தன்னிலேலயம் பண்ணிக்கொண்டு
பிராரத்தியினால்தன்னிடத்திற்காணப்பட்டபாவனைகளாகவிபரீத
பாவனையைத்தவிர்த்துவாருயிருக்கிறவன் விட்டொழிவான்;

வினா- அதெப்படியெனின்,

விடை- தேகத்துக்கு விபரீதபாவமாகிய சுயம்பிரகாசமான ஆ
ன்மப்பிரகாசமேமுத்தியென்றுசொல்லியிருப்பதாற்சதாகா
லமுமனதையடக்குகிறவனுக்கேயிந்தச்சமாதிசித்திக்கும்இல்
லாவிட்டால் சித்தியாது- ஆனதால்சதாகாலமுமனது மொடுக்
கவேணும்அப்படிக்கில்லாமல்யாதொருவேஷியானவனேயிருந்தாலும்
இந்த அகண்ட சச்சிதானந்த ஆத்துமானுபவ நிலைசித்திக்கமா
ட்டாது அதுவருகிறதின்பொருட்டுச் சச்சிதானந்தமான தன்
னிடத்தில்அகங்காரங்களையும்அகங்காரங்களுடையவிகாரங்களை
யும் நிவிர்த்தி பண்ணவேணும்—யாதொரு புருஷனாலே யா
ன்மதத்துவத்தை யவலம்பித்துக்கொண்டுபிரகிருதிநாசப்பண்
ணப்படுகிறதோ அவனேமுத்தனாவான் அப்படியின்றிக்கோடிகர்ம
ங்களைப்பண்ணினாலும் முத்தனாகமாட்டான், யசுர்வேதத்திலேசு
வேதாசுவேதரவுபநிஷத்தில் சுயம்பிரகாசமான ஆத்மாவை ப
ஜித்தவன்சகலஅஞ்ஞானபாசங்களையும் அறுத்துச்செனனமிரு
த்துக்களானசகலகிலேசங்களையும்விட்டொழிவனென்றுசொ
ல்லுகிறதினால்சகலகிலேசங்களையும்விட்டொழிகிறதே செனன
மொழிகின்றது, ஆனதால்அந்தநிலைமையேஜீவன்முத்தியென்
றுசொல்லப்படும்-முத்தியென்பது திரும்பச்செனனமில்லாம
லிருக்கிறதானதால் அந்தச் செனனமின்மையுங்கிலேசங்க
ளொழிகிறதினால் சித்திக்கும் கிலேசங்களொழிகிறதும் ஆத்து
மநிட்டையினாற்சித்திக்கும் ஆதலால் முமுட்சுவாயிருக்கிறவன்
ஆத்துமநிட்டையைச்சதாகாலமுஞ்செய்யவேண்டும்—யாதொ
ருமனுஷனுக்குஞ் செனனத்துக்குக்காரணமானதுகிலேசவாச
னையேதவிரவேறில்லை ஆகையால்அந்தவாசனாரூபமானகிலே
சங்களைஞானநிஷ்டையாகிற அக்கினியினால் தகித்துப்போடும்
போது அந்தவாசனைகள்செனனத்துக்கேதுவாகமாட்டாது.

வினா- அதேதெனின்,

விடை- அக்கினியில் வறுத்தவித்தானது முளைக்கின்றதற்கு எப்படியாகமாட்டாதோ அப்படியே ஞானாக்கினியினால் தகிக்கப்பட்டவாசனாரூபமான கிலேசங்கள் புனர்ஜன்மத்திற்கு ஹேதுவாகமாட்டாது — ஆகையால், முமுக்ஷுவானவனுக்கு அதேசஷ்ணாசமுட்சயமாய் விபரீதமானவை நிவிர்த்தியாகும்பொருட்டுப்பிரயத்தனம் பண்ணியாகிலும் ஞானநிஷ்டை செய்யவேணும் — இந்த ஞானநிஷ்டாபரனாயிருக்கிற புருஷனுக்குக் கர்மங்களைச்செய்யக்கணக்கில்லை, கர்மங்களுக்கும் ஞானங்களுக்கும் ஒன்றுக்கொன்று கூட்டுறவு சித்தியாது, இப்படி ஒன்றுக்கொன்று கூட்டுறவில்லாததால் பின்னபாவங்களாயிருக்கிற கர்மஞானங்களுக்கு ஐக்கியங்கூடாது.

வினா- அதேதன் கூடாதெனின்,

விடை- தேகாத்துமபுத்தியோடே கூடினகர்த்திருத்துவபாவனையானது கர்மம், அந்தக்கர்த்திருத்துவபாவனையைக்கெடுப்பது ஞானம், கர்மமும் அந்த ஞானத்திற்குமுன்னே ஆகையால் அந்தக்கர்மாஞானங்களைக் கெடுக்கிறதே ஞானம் ஆகையால் ஒன்றுக்கொன்று விரோதங்களாயிருக்கிற ஞானகர்மங்களுக்கு ஐக்கியமெப்படி சித்திக்கும் — தேஜஸ்திமிரங்களுக்குங் கூட இசைந்துவருகின்றதற்கு எப்படி கூட்டுறவு காணுமோ அப்படியே ஞானகர்மங்களுக்குங்கூட்டுறவில்லையென்றறி — மேற்குமுகம் பார்க்கிறவனுக்கு கிழக்குமுகம் பார்க்கிறதற்கெப்படிகூடாதோ அப்படியே அந்தர்முகமான ஞானநிஷ்டையைப் பொருந்தினவனுக்கு கர்மத்தினிடத்தில் எப்படி யோக்கியமுண்டாகப் போகின்றது — ஆகையால் ஞானநிஷ்டா நிரந்தரனாயிருக்கிற முமுக்ஷுவுக்கு கர்மதந்திரத் தொழிலில் அவகாசமில்லை.

வினா- பின்னேதென்னெனின்,

விடை- ஞானநிஷ்டையே கர்மம் ஞானநிஷ்டையே சந்தியாவந்தனம் ஞானநிஷ்டையே சகலகர்மமும் ஞானநிஷ்டையைத் தவிர வேறொரு கிருத்தியமுமில்லை — பலவேறுவகைக்கர்மங்களினால் சாதிக்கப்படுகின்றகர்மமெதுவோ அது அந்த ஞானத்தால் சுத்தப்பொய்யென்று சகலக்கிரியைத்தையுமொழிந்து நிற்கிற காரிய நித்தியசொரூபமான நிஷ்டையதுவோ அதுவே சந்தியாவந்தனம் அதுவே அனுஷ்டானம் அதுவே தானம் அதுவே கொடை

அதுவேபோசனம் ஆதலால் சுத்தசத்துவம்பொருந்தியபரமா ர்த்தத்தையறிந்திருக்கிறசத்புருஷர்களுக்குச் சகலரூபஞ்சொரூப நிஷ்டையென்றறி — சகலத்தையும் விட்டொழிந்து ஞானநிஷ் டாபரர்களாயிருக்கிற சந்நியாசிகளுக்கு ஞானநிஷ்டையைத் தவிரவேறே செய்கையில்லையேனும், கிரியாந்தரங்களான தொழில்களெல்லாமொழிந்து ஞானநிஷ்டாபரனாயிருக்கவே னும்- ஞானமாகிறமேடையின் மேலேறவேணுமென்றிச்சித் திருக்கிற மூமூட்க்ஷுவானவன் ஆத்மநிஷ்டையாகிற கர்மஞ்செ ய்துக்கொண்டு சஞ்சலமில்லாமல் சதாநுபான பாராயணனாயா ன்மாவினிடத்தில் நிலைத்திருக்கவேணும் — ஆதலால் ஞானமா கிற உப்பரிகைமேலேறுகிற அப்பியாசிக்கு ஞானநிஷ்டாசாத னங்களானதே கர்மங்கள் — யோகமாகிறமேடையின் மேலேற வேணுமென்கிறயாதொருமூமூட்க்ஷுவுக்கும்யோகத்தைத்தவிரக் கிரியாந்தரமெவ்வளவுமில்லை யாதொருத்தன் யோகியாயிருந் தும் யோகத்தைத்தவிரவேறே கிரியாந்தரங்களை நினைக்கிறா னோ அவன் மரத்தின்மேலேறி விழுந்தவனெப்படிகாயம்படு வானோ அப்படியே அதோகதியில விழுந்துபோவான் — ஞா னமாகிற மேடைமேலேறியிருக்கிற கிருதகிருத்தியனான புத்தி சாலிக்கு வெளியில் செய்யவேண்டிய காரியமொன்றுமில்லை வெளிப்பார்வையுமில்லை ஆதலால்கர்மவாசனை யவனுக்குக்கேச கையில்லை — இனிசத்தானுவித்தசமாதிகளைச் சொல்லுகிறே ன்கேட்பாயாக.

## அந்தர்சத்தானுவித்தம்.

வினா- அதேதெனின்,

விடை- சுத்தசின்மாத்திரமாய்ச் சேர்க்கப்பட்ட சத்தத்தோ டேகூடிக்கொண்டு நான் அசங்கன் சுயம்பிரகாசன் அத்[illegible] தனென்கிற சத்தங்களைப்பொருந்தி அந்தச்சத்தங்களனுசாரமா கப்பாவித்தபாவனையெதுவோ அதுவே சவிகற்பசத்தானுவி த்தசமாதியென்றுசொல்லப்படும்.

வினா- இதற்குபாயமேதெனின்,

விடை- சத்தனென் புத்தனென் பிரத்தியகான்மசொரூபனாயிருக் கிற நித்தியசித்தனென் சாந்தனென் ஆனந்தனென் சதாகாலரூபம் பரமானந்தக் கடலாயிருக்கிறவனென் — ஆதியுமன்றியும் நா ன்வாக்குமனசுகளினால் சாதிக்கப்பட்டவனல்லவும் நான்வேதா ந்தவாக்கியங்களினால் அறியப்பட்டவனென் அளவில்லாத அக ண்டபோதரூபமே நான் ஆதித்தன் அறியே [illegible]

னியமானவனும்; மாயாகாரியமேலசங்களில்லாதவனும், கேவலநிருக்குருபமானவனும், ஞானசொரூபனும், ஏகப்பிரகாசமாய் விளங்குகிறவனும் — முன்பின்னென்கிறதில்லாதவனும், உள்ளும் புறம்பும் நிறைந்து பரிபூரணமாயிருக்கிற வஸ்ம் நான் ஜெனனமரணமில்லாதவன் நான் நித்தியானந்தமான அத்துவைதமே நான் — பிரத்தியக அபின்னமென்றும் அகண்டமென்றுஞ் சச்சிதானந்தலட்சணமென்றுஞ் சுத்தமென்றுஞ் சுருதியினுல் சொல்லப்பட்டபரஞ்சோதியான பிரமமெதுவோ அதுவே நான் — என்கிற சத்தமாத்திர மாயிருக்கிற விருத்தியோடே கூடிக்கொண்டு சத்தமாத்திரம் பொருந்தின சத்தங்களுடன் கூடியேயாகியானவன் சஞ்சலமில்லாமலிருந்தச் சத்தானுவித்தமான பாவனையைச்சாதிக்கவேணும் — மேலும், காமாதிரிசியங்களைச்சொரூபத்திலே லயப்பண்ணிச் சுத்தோகமாதலாகிய சத்தங்களுடன் கூடியிருக்கிற பிரதானமான பாவனையைப்பொருந்தினதெதுவோ அது சத்தானுவித்த சவிகல்பசமாதியென்று சொல்லப்படும்.

## அந்தர்நிருவிகற்பம்,

வினா- அந்தர்நிருவிகற்பமாவதேதெனின்,

விடை- இந்தத்திரிசியானுவித்தசத்தானுவித்தசவிகற்பமென்கிற இரண்டும்விட்டொழிந்தமனதினுடையதொழில்களையுங்கடந்தொழிந்துபோகிறதே நிர்விகற்ப சமாதியென்று சொல்லப்படும் — மேலும், முன்சொன்ன இருவகைச் சவிகற்பசமாதிகளில் அன்புடனே யிடைவிடாமலெவனெருநாட்படுகிறவருகிறனே அவனுக்கே இந்தநிர்விகல்பசமாதி சித்திக்கும் — எவன் நிர்விகல்பசமாதி நிஷ்டையைப் பொருந்தியிருக்கிறனே அவனுக்கேயாசனுட்சயமுஞ் சித்தலயமுந்தடையற்ற நிச்சலானந்தமுஞ் சித்திக்கும் — இந்தலட்சணம் பொருந்தினவன் வித்துவான அவன் இதுவெனதென்று உள்ளும்புறம்புங்காணுமல் ஆனந்தஸ்தீர்தக்கடலில் அழுந்தினவனுய்த்தன்னைவிட அன்னியமில்லாதவனுயிருப்பன் — ஆதலால் நிர்விகற்பமாயும் பரப்பிரமமாயுமிருக்கிற பிரமத்தினிடத்தில் நிஷ்டையைப்பொருந்தினவர்களாரோ அவர்களேமுத்தர் அவர்களேசிவத்தன்மைபொருந்தியும் பொருந்தாமலிருக்கிற பேர்களென்றறி — அப்பா, முன்சொன்ன சவிகற்பத்தில் சத்ததிரிசியானுவித்தங்களிரண்டுமிட்டோது சொன்ன நிர்விகற்பசமாதியொன்றும் ஆக மூன்றையுமெத்தனத்தினுலுள்ளே எப்படியெப்படியாகிறதோ அப்படியேயதனைக்குவெளியிலுந்தெரியத்தகிரக்த்

அதிஷ்டானமாகியும் ஏகமாகியும்விசுத்தமாகியும் சத்தாகியுமிருக்கிறபரமாத்மாவேநானாகேனன்— நானே தேசமல்லகாலரூபமல்ல திக்குமல்ல வஸ்துவுமல்ல தூலசூட்சும ரூபமாகிய ஜடமல்ல இதற்கெல்லாமதிஷ்டானமாகியும் விசுத்தமாகியும் ஏகமாகியும் பரமாகியுஞ் சத்தாகியுமிருக்கிற ஆன்மாவே நானாகேனன்—என்றிப்படிக்காணப்பட்ட நாமரூபாதிகளெல்லாம்போய்இதற்கதிஷ்டானமான பிரமமே சதாசத்திடமென்று பாவித்துநடக்கிறபோதுமிருக்கிறபோதுஞ்சயனித்துக் கொண்டிருக்கிறபோதுஞ்சதாகாலமுமித்தப்பாகியதிரிபானுவித்தசவிகற்பசமாதியே செய்யவேணும்- இனிபாகியசத்தானுவித்த சவிகற்பசமாதியையுஞ்சொல்லுகிறோம்.

### பாகியசத்தானுவித்தம்.

வினா- அதேதெனின்,

விடை- அதிஷ்டானமானசச்சிதானந்தத்திற் கற்பிதமானநாமரூபாதிஜாலம்பண்ணிநிருமலயாகியும் அத்வைதமாகியும்பரமானந்தமாகியுமிருக்கிறபிரமமே நானென்கிற பாவனைசெய்வதேபாகியசத்தானுவித்தசவிகற்பசமாதி.

வினா- இதற்கனுபவமேதெனின்,

விடை- நிர்விகாரமாகியும் நிராகாரமாகியும் நிரஞ்சனமாகியும் அனுபமமாகியும் ஆதியந்தமில்லாததாகியும் பூரணமாகியுமிருக்கிற பிரமமே நான் சமுசயமில்லை— நிஷ்களங்கமாகியும் நிராபாசமாகியுந்திரிவிதபரிச்சேத சூனியமாகியும் ஆனந்தமாகியுஞ் சமமாகியும் அவ்வியத்தமாகியுமிருக்கிற பிரமமே நான்சமுசயமில்லை— நிர்விசேஷமாகியும் நிர்விகாரமாகியும் நித்தியமுத்தமாகியும் நிஷ்கிரியமாகியும் பிரஞ்ஞானகாசமாகியுஞ்சத்தியமாகியுமிருக்கிறபிரமமேநான்சந்தேகமில்லை சுத்தமாகியும் ஆதியந்தசூட்சுமமாகியும் புத்திமாத்திரமாகியும்நிருவிகற்பமாகியுஞ்சத்தாகியுங்கேவலமாகியும் பரமாத்துவைதமாகியுமிருக்கின்ற பிரமமேநான்—சுத்தமாகியும் புத்தமாகியுஞ் சுகசித்தமாகியும்பரமாகியும்பிரத்தியகண்டமாகியும்அகண்டமாகியுஞ் சொப்பிரகாசமாகியுஞ் சிதாகாசமாகியுமிருக்கிற பிரமமே நான் சந்தேகமில்லை—என்று நிர்விகாரதிசஞ்ஞைகளுடன் கூடிக்கொண்டு கேவலமானவஸ்துலட்சியத்தில் மனதை நிறுத்தித்தியானம் பண்ணுகிறதே பாகியசத்தானுவித்தசவிகற்பசமாதியனுபவம்.

## பாகியநிருவிகற்பம்.

வினா- பாகியநிருவிகற்பமாவதெவ்விதம்,

விடை- பிரமானந்தரசபானத்தினாலே சொரூபத்திலேயே லயமாயொன்றிப்புறம்பின் சகலமுமற்று நிச்சலமாயிருக்கிறதே பாகியநிர்விகற்பசமாதி யெனப்படும்— மெய்ஞ்ஞானியானவன் எழுந்திருக்கிறபோது மிருக்கிறபோது மறதியில்லாமல் இந்திரியநிக்கிரகம்பண்ணிக்கொண்டு சர்வதா இந்த ஆறுவகைச் சமாதியும் சாவதானமாய்ச் செய்யவேணும்— மேலும், விபரீதபாவனையானதுகட்டோடே யெவ்வளவுகாலம் நிவிர்த்தியாகவில்லையோ அவ்வளவுகாலமட்டுமிந்த அப்பியாசமாதிகளைச்செய்யவேணும்— தடையற்ற சொரூபானுபவப்பிரகாசமானது எதுபரியந்தஞ் சித்திக்கவில்லையோ அதுபரியந்தமும் இந்த ஆறுவகைச் சமாதியினால் நிரந்தரம் பொழுதுபோக்கவேணும்— மோட்சம் வேணுமென்கிற இச்சையுள்ளவன் சமாதியைமறந்து ஒருக்காலுமிருக்கக்கூடாது சமாதியை மறந்தானாகில் சூரியனில்லாதபோது இருளானது மூடுகிறதுபோல மாயையானது சொரூபமாகிற தன்னைமறைக்கும்— ஆகையால் பெரியவர்களானபேர்களானுபவத்தைவிட்டுக்ஷணமாத்திரமு மிருக்கின்றதில்லை சொரூபானுபவத்தைமறந்திருக்கிறதேமிருத்யுபயம் இதுவல்லாமல் வேறேயில்லையென் றுசனற்குமாரரால் சொல்லப்பட்டிருக்கின்றது— இப்போது நாம் சொன்னபடி சமாதியில் எவன் பிரயாசப்படுகிறானோ அவன்மனதுக்கு நிருவிகற்பமுந்தோன்றும் இந்த அப்பியாசத்தினால் சர்வாத்துமபாவகஞ் சித்திக்கும், சர்வாத்துமபாவகமே கைவல்லியம்— மேலும், யாதொருவித்துவாஞ் சாருக்குஞ் சர்வாத்துமபாவகம் பொருந்தினதே பிரமவித்தைக்குப்பலமென்று பெரியவர்களறிந்திருப்பார்கள், சீவன்முத்தனாயிருக்கிறவனுக்குச் சகலமுந்தானாயிருக்கிற ஆனந்தானுபவமேபலம்— நானென்று இதுவென்பது முதலாகிய அசத்தைக்கிரகிக்கிறதே இருதயக்கிரந்தி இந்தஇருதயக்கிரந்தியானது வாசனைபோடே கூடச் சமாதியினாலே நசிக்கிறபோது பிரமமேதானாயிருக்கிற அனுபவந்தடையற்று விளங்கும்— மோட்சத்துக்கு நிமித்தமாயிருக்கிற வஸ்து பிரமமேதானாயிருக்கிற நிலைப்பு, இதுசாத்திரத்துக்காரணமாயிருக்கிற மூமுட்சுக்களுக்குஞ் சதாகாலமுந்தோற்றும் மற்றொருத்தருக்குந் தோற்றாது— ஆகையால் நீ மறதியில்லாமலிருந்துகொண்டு இவ்வாறுவகைச் சமாதியுநன்றாயப்பியாசஞ்செய்து இருதயக்கிரந்தியை ஞானக்கினியினால் தகித்து நிரந்

தாம்பிரமானந்தாமிர்தசமுத்திரத்தில் அமிழ்ந்திச்சந்தோஷமாயிரு—விருத்திசஞ்சலமில்லாமல் நிச்சலமாயிருக்கிறதே நிர்விகற்பசமாதி, அந்த நிர்விகற்பசமாதியே யோகமென்று யோகசாத்திரார்த்தத்தை யறிந்தவர்கள் சொல்லுவார்கள். ஆதலால் இந்தயோகத்துக்கு அஷ்டாங்கங்களுமுண்டு.

அஷ்டாங்கம்.

வினா— அதேதெனின்,

விடை— இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதியெனப்பெரியவர்களால் சொல்லப்பட்டிருக்கின்றது.

வினா— இயமமாவதேதெனின்,

விடை— அகிம்சை சத்தியம் அஸ்தேயம் பிரமசரியம் அபரிக்கிரகம் சவுசம்சமம் சந்தோஷம்தபஸ் சுவாத்தியாயம் வணக்கமிவைகளேஇயமமென்று சொல்லப்படும்.

வினா— நியமமாவதேதெனின்,

விடை— ஆகாரநித்திராசேதம் இந்திரியசேதம் சீதவாத வருஷவுஷ்ணசேதம் அபிமானதுக்கசேதம் சாந்திமுதலிய இவைகளே நியமமென்று சொல்லப்படும்.

வினா— ஆசனமாவதேதெனின்,

விடை— பதுமாசனஞ்சித்திராசனம் முதலாகிய ஆசனங்களில் தனக்குவந்த ஆசனத்திலிருந்தால் மனதுக்காயாசந்தோணாதோ அந்தச்சுகாசனத்திலிருக்கிறதே தியானசாதனமான ஆசனமென்று சொல்லப்படும்.

வினா— பிராணாயாமமாவதேதெனின்,

விடை— அபானனைப்பிராணனுடன் கூட்டிஇருதயத்திலொன்றாய் நிறுத்திக்கொள்ளுகிறதுமன்று நிச்சலமானபிராணாயாமமென்று சொல்லப்படும்—மேலும், பிராணாபானங்களையொன்றாகமனதிலே நிறுத்திக்கொண்டு கும்பகம் பண்ணினால் மனது நிச்சலமாகும் அப்படிபண்ணாதவனாயில் மனதுசஞ்சலமாய்விடும்—ஆதலால் மனதுநிச்சலமாகும்பொருட்டுப்பிராணாயாமம் பண்ணவேணும் இந்தப்பிராணாயாமமானது சகற்பப்பிராணாயாமமென்றும் நிகற்பப்பிராணாயாமமென்றும் இரண்டுவிதமாகவிருக்கும் இதில்பிரணவத்தோடேகூடிவாயுவை நிறுத்துகிறதே சகற்பப் பிராணாயாமமென்றும் பிரணவமில்லாமல் வாயுவைநிறுத்துகிறதே நிகற்பப் பிராணாயாமமென்றுஞ்

சொல்லப்படும் இப்படி நிறுத்துகிற பிராணாயாமத்துக்கே ரேசகபூரககும்பகமென்று திரிவிதமாய்ச் சொல்லுவார்கள்,

வினா- அஃதேதெனின்,

விடை- பிரணவத்தையுச்சரித்து முப்பத்திரண்டு மாத்திரைவரைக்கும் பூரிக்கிறது பூரகமென்றும், அறுபத்து நாலுமாத்திரைவரைக்குமுள்ளொடுக்குகிறது கும்பகமென்றும், இந்தப் பூரககும்பகங்களினால் நிறுத்தினவாயுவைப் பதினாறுமாத்திரைவரைக்குமெள்ளமெள்ள ரேசிக்கிறது ரேசகமென்றுஞ் சொல்லப்படும் இப்படியிந்தப் பிராணாயாமத்தையோகியானவன் பிராதக்காலத்திலுமத்தியானகாலத்திலுஞ் சாயுங்காலத்திலும் அஸ்தமனமானபின் பிறகும் அர்த்தராத்திரியிலும் விடியற்காலத்தும் எழுபத்திரண்டுவிசை ரேசகபூரககும்பகங்களை அப்பியாசிக்கவேணும்—இப்படி நிரந்தரமுஞ் சரிகாலத்திலும் பிராணாயாமத்திலேயப்பியாசிக்கிற யோகிக்குப்பலன் மாசமானதிலேவாசஞ் செயமாகும், சுவாசஞ்செயமானால் மனது நிர்மலமாகும்—மனது நிர்மலமானால் சொரூபானந்தஞ் சித்திக்கும் ஆதலால் இந்தப் பிராணாயாமத்தைப் பிரயத்தனம் பண்ணிச்சதாகாலமுமப்பியாசிக்கவேணும்—இந்தப்பிராணாயாமத்தினால் தேகத்திலுண்டானவாதபித்தசிலேஷ்டமங் காசங்குன்மங்குஷ்டயமுதலான வியாதிகளாகிய சகலபாவங்களும் நசிக்கும்-இதல்லாமல் ஆயுசுதேககாந்திமூலாக்கினிஇந்திரியசத்திகளாகிய வெல்லாம் விருத்தியடையும், அவைவிருத்துக்களும் பறந்தோடிப்போம்-அப்பா! யோகசித்தியின் பொருட்டுப் பிராணாயாமத்துக்குச் சமானமான சாதனம் வேறேயில்லை ஆதலால் இந்தப் பிராணாயாமஞ் சதாகாலமுஞ்செய்யவேணும்,

வினா- பிரத்தியாகார மாவதேதெனின்,

விடை- புத்திவிருத்தியை இந்திரியங்களிற்போகாதபடிக்குப்பிரமத்தினிடத்தில் நிறுத்துகிறதேபிரத்தியாகாரமென்று சொல்லப்படும்.

வினா- தாரணையாவதேதெனின்,

விடை- இப்படிப்பிரத்தியாகாரம்பண்ணின மனதைப் பிரத்தியகான்மாவினிடத்தில் நிறுத்திவெளியிற் சஞ்சலமாய்ப் போகாமல் லட்சியத்தில் திடம்பண்ணுவது தாரணையென்றுசொல்லப்படும்.

றவிரோதத்தைப் போக்கிறதற்கு யோகியானவன் வைராக்கியத்தினுல் விடயங்களிற் போனவிருத்தியைத் திருப்பி யேகாத்ம அப்பியாசமாயிருக்கவேணும் — இந்தச்சமாதிக்கு இந்தவிரோதங்களில்லாமல் பின்னும்பலவிரோதங்கள் வந்தாலும்யோகியானவன் நிதானத்தினுலும் சமாதியினுலும் விக்கினங்களைப்போக்கி நிர்விகற்பத்தை அப்பியாசிக்கவேணும் — விடய சந்நிதியில் இந்திரியங்களைப்போகவொட்டாமல் மனதை நிக்கிரகம் பண்ணுகிறவனே தீரன், அந்தத்தீரனே தீவிரவைராக்கியத்தையுடைத்தானவனுயும் சிரவணுதிசாதனங்களைச் சகிக்கிறதாயிருக்கின்றநிஷ்டையையுடைத்தானவனுயுஞ் சகலவிருப்பமற்றவனுயுமிருப்பவன் இவனுக்கு இஷ்டமாத்திரத்தால் யத்திரயாதிவிக்கினங்களெல்லாம் பறந்துபோய்விடும் — சகல விக்கினங்களையுங் கெடுத்துவொட்டிக்கிற வராயிருக்கிற ஈசுரன் பரமானந்தியாயிருக்கிற ஞானியினுல் உபாசிக்கப்பட்டு முன்னிற்பார் — ஆனதால் முமுட்சுவாயிருக்கிறவன் சகலவிக்கினபயங்களையும் பொறுத்து ஈசுவரனிடத்தில் பாரத்தை வைத்து நிர்விகற்பத்தைச் செய்வானுகில் அதற்கொருவிக்கினமுமில்லை — முன்சொன்ன அகண்டாகாரவிருத்திரூபமான அப்பியாசயோகத்தினுல் விருத்தியானது ஒருமையையடைந்ததாகவும் அலைவற்றதாகவும் பிரமாகாரமாகவுமிருக்கிற ஆனந்த சொரூபமான பரப்பிரமத்தினிடத்தில் அத்துவிதமாகவேயிருக்குது — இப்படிக் கொத்தாரஜீவயோகியானவன் உள்ளும் புறம்புஞ்சொரூபமன்றி அன்னியமில்லாத பரப்பிரமத்தையேயப் சகலமுமாகப்பார்த்துக் கொண்டிருப்பன் — இந்தநிலையே முத்திக்குச்சாதகமாயிருக்கிற அவத்தை இந்த அத்வைதபரக்கேவலமானவுன்மனியாவஸ்தையென்றுசொல்லுவார்கள்.

வினு — உன்மனியாவஸ்தையாவதேதெனின்,

விடை — நிர்விகற்பமாயிருக்கிற ஆன்மாவினிடத்தில் ஆத்துமாகாரமாயேகரூபமான அகண்டாகாரவிருத்தி நிலைபெற்றிருப்பதே உன்மனியாவஸ்தையென்றுசொல்லப்படும் — மேலும்; அத்துவைதபரப்பிரமப் பிரகாசத்தினுல் அஞ்ஞானமாகிற அந்தகாரம் நிவிர்த்தியாய்ப் பரப்பிரமமாயிருக்கிற தன்னுமே தான் சாட்சாத்காரமாகிறபோது ஆன்மாவாயிருக்கிற தேகாதிகளை நானெனவெண்பது முதலான இருதயக்கிரந்தியும் சொரூபத்தைத் தெரியவொட்டாமல் மறைத்திருந்த சமுசயங்களுஞ் சஞ்சலமான கர்மங்களுமாகிய அஞ்ஞானநாசமானவுடனே

சொரூபமாயுங் காண்கிற கிருதார்த்தனுன பிரமவித்துக்குச் செய்யவேண்டியது அடையவேண்டிய தொன்றுமில்லை — வித்துவானகவிருக்கிறபிரமநிஷ்டன் இதுவிதியென்றொருதொழிலுஞ்செய்யாமல் இதுநிஷேதமென்றொருதொழிலையும் விலக்காமலிரண்டையுங்கடந்து நிஷ்கிரியனுகவேயிருப்பன் — தேகேந்திரியங்களை நானென்று அபிமானத்தவனெவனே அவனுக்கேவிதிநிஷேதங்களன்றிப்பாரதத்துவத்தைக் கண்டவனுக்கில்லை ஆதலால் அவனுக்கு, யதேச்ச சஞ்சாரமுமில்லை யதேச்ச சஞ்சாரமுந் தேகேந்திரிய அபிமானத்தோடு கூடினவனுக்கேயல்லாமல் ஞானிக்கில்லை.

வினு- அதேதெனின்,

விடை- எவன்பேதமாகப் பார்க்கிறானே அவனுக்கே யதேச்ச சஞ்சாரதோஷமுண்டாம் அவனுக்கு ஞானவாசனையனுமாத்திரமும்வாராது, தேகாத்தும புத்தியோடேகூடின பசுவாயிருக்கிறவனுக்கு யதேச்ச சஞ்சாரமானபோல ஞானிக்கு யதேச்ச சஞ்சாரமிருந்தாலென்ன போலாருக்குமென்னுருத்தர் ஏற்றத்தாழ்ச்சியில்லை.

வினு- அதெப்படியெனின்,

விடை- நாய் பன்றி கழுதையும் அன்னியனுல் விடப்பட்ட மலத்தைப் பொசிக்கிறதிலே தாழ்ச்சி ஏது ஏற்றம் அப்படிபோல ஞானியானவன் யதேச்ச சஞ்சாரவானுனுல் தன்னுல் விடப்பட்ட மலத்தைப் பொசிக்கிற நாய் பன்றிகழுதையை விடஎறிந்து போட்ட துன்மார்க்கனென்றறி.

வினு- அதேதெனின்,

விடை- ஒருவன் வாந்திபண்ணின அசனத்தைத்திரும்பப்பொசிக்கவேணுமென்றிச்சிப்பானு அதுபோல ஞானியானவன் தன்னுல் விடப்பட்ட விடயங்களைப் பொசிக்கிறதற்கு இச்சிப்பானு ஆதலால் ஞானியாகிய இவன்முத்தனிச்சியான் — மேலும், அனந்தங்கோடி ஜென்மங்களிலுஞ்செய்தபுண்ணிய பரிபாகத்தால் சந்தோஷித்த ஈசுவரப் பிரசாதத்தினுல் பிரமாதி தேவதைகளுக்குந் துர்லபமாயிருக்கிற பிரமாநந்த ரசத்தையடைந்தபின் துச்சமாகியும் பொய்யாகிய லட்சியத்தைப் பொருந்தினதாகியுமிருக்கிற விடயத்தைப் பொசிக்கிற தற்கெவன் சந்தோஷிப்பான் ஆதலால்பிரவிருத்தியில் ஞானியானவன் சந்

தோஷிப்படான்—அத்வைதியானவன் இச்சாமயமாயும் அசத்தாயுமிருக்கிற தேகாதி சகலப் பிரபஞ்சமும் பொய்யென்றுகண்ட பின் திரும்ப அதைவிரும்பித்தொழில் செய்யான், மேலும், யாதாமொருவன் தேகாபிமானம் விடாமல் அதனோடுகூடி யெதேச்ச சஞ்சாரம் செய்கிறானோ அவன் மூடனுக்குள்ளே அதமனாயிருக்கிற காளுடைய மாடென்று சொல்லப்படும்—மகாத்துமாவாகவும் இருதார்த்தனாகவும் ஆன்மானந்தரசத்தைப்பானம்பண்ணிக்கொண்டிருக்கிற வனாகவுமிருக்கிற பிரமநிஷ்டன் விஷய யெதேச்ச சஞ்சாரத்திலொருக்காலுங்கூடிவனல்ல—ஆத்துமாராமனாயிருக்கிற யோகிக்கு யெதேச்ச சஞ்சாரமானது பாசனாதிகளிலுமல மூத்திரவிஸர்ஜனங்களிடத்திலுந்தவிர அன்னிய சஞ்சார அவகாசமில்லையென்றறி—ஞானியினுடைய தர்மமானது பிரமநிஷ்டையும் அஞ்ஞானியினுடைய தர்மமானது தேகாபிமானத்தோடே கூடின விஷயபோகமுமென்று சொல்லப்படும், இவ்விஷ்ணம்போல விபரீத லட்சணமான தொழில்கள் ஒருபுருஷனிடத்திலொருக்காலுங்கூடாது,

விஞா— அதெப்படியெனின்,

விடை— ஒன்றுக்கொன்று பிரிந்திரண்டதிகாரங்களைப்பொருந்தினதாயிருக்கிற சாம்பிராச்சியபட்டாபிஷேகமும் பிட்சாடனமும் மொன்றாய்ப்பொருந்தமாட்டாது, ஆனதால் ஞானியானவன் அனந்தபுண்ணியம்பொருந்தினமகிமையுடைத்தானவனாய் ஆன்மசாம்பிராச்சியத்தை யனுபவித்துக் கொண்டிருப்பன், மூடனானவன் சித்தத்திலுண்டான தோஷத்தினால் சகலவிஷயங்களையும் பிராந்தியினால் அனுபவிக்கப்பட்டு அபேட்சையாய் விடுவான்—ஆன்மானந்தரசத்தைச் சுகமாய்ப் பானம்பண்ணிக்கொண்டு பிரத்தியகான்மாவாயிருக்கிற தன்னைச்சகல நாமரூபப்பிரபஞ்சத்துக்கும் அதிஷ்டானமாயிருக்கிறசச்சிதானந்த பிரமமாகக்கண்டுகொண்டு அந்தர்முகமான அகண்டாகாரவிருத்தியினால் இந்திரியவிஷய ரூபமான கூட்டங்களைக்கெடுக்கிறவனாகியும் பிரவிர்த்தியிற்பொறுமையடைந்தவனாயுமிருக்கிற சர்வத்தியாகியான பிரமநிஷ்டனுக்குச் சொப்பனத்திலாகிலும் யெதேச்ச சஞ்சாரபாவனைவரமாட்டாது,

விஞா— அதேதெனின்,

விடை— நல்லபுத்தியுள்ளதாயும் பாலைப்பானம் பண்ணிக்கொண்டு தேவதா சம்பந்தமாயுமிருக்கிறஅம்சமானது சலத்தைத்

ப்பானம் பண்ண எப்படி யிச்சிக்கவில்லையோ அதுபோல ப்பிரம நிஷ்டனும்பெதேச சஞ்சாரமிச்சியான்—மேலும், பிரமசரியாதி சாதனங்கள் வெகுகாலமனுசரித்தாலது பரிபக்குவமான பிரமநிஷ்டனை இயமாதிகுணங்களனுசரித்திருக்கும்.

விரு- அதெப்படியெனின்,

விடை- அக்கினியையூசிகாந்தமுதலானதெப்படியனுசரித்திருக்கிறதோ அதுபோலஇயமாதிகளனுசரித்திருக்கும்—அசமுசஞ் சத்துருசெயமுள்ளவனாகவும்யுத்தமுகத்திலேமகாதீரப்புள்ளவனாகவுமிருக்கிற சத்தவீரனுக்கு யுத்தத்தில் காயம் பட்டதழும்புகளெப்படி பூஷணங்களாயிற்றோ அதுபோல ஆத்துமஞான நிஷ்டையைப் பொருந்தியிருக்கிற ஞானிக்கு இயமாதிகுணங்களே பூஷணம்—இந்தப்பிரம நிஷ்டனை சந்நியாசியானவன் பசியைப்போக்கடிக்கிற தொழிலான பிட்சாடன முதலானதுகளில் பிரவிர்த்தித்தபோதும் பிரபஞ்சமாய்ப் பாராதபடி செகத்தைப் பொய்யென்று தள்ளிச்சதா ஆத்துமபாவனையாயிருந்துகொண்டு சுரோத்திராதிபஞ்சேந்திரிய அந்தக்கரணமுதலானதுகளினாற் செய்யப்பட்ட தொழில்களெல்லாவற்றையும், ஒருவர்க்கொருவர் எதிர்த்து அடித்துக் கொள்ளுகிறதைப் புறம்பாக நின்று சாட்சிக்காரன் பார்த்திருப்பதுபோல் பந்தமுத்தனுகச் சகலபந்தங்களையு மொழித்துத்திட சித்தனாகப்பார்த்துக்கொண்டிருப்பன்—ஆதலால் இப்படிப் பட்டசுரேஷ்டமான பிரமவித்தானவன்கண்ணில்லாத அந்தகர்களிலுங்கண்தெரிந்தவன்போலச்சகலசனங்களிலுங்காணப்படுவன், காதில்லாதவர்களிலுங் காதுடையவன்போல் விளங்குவன் வாக்கில்லாதவர்களிலும் வாக்குள்ளவன்போல் விளங்குவன்—பிராணனில்லாதவர்களிலும் பிராணனுள்ளவனுவன் மனமில்லாத வர்களிலும மனமுள்ளவன்போலவும் தான்றானே சதாகாலமும் பிரமமாகவேயிருப்பன்.

விரு- இன்னமுமிந்த ஆத்துமஞானியானவன் எப்படியிருப்பானெனின்,

விடை- ஆத்துமதரிசனனாகவும் ஆன்மாதிகனாகவுஞ் சந்துஷ்டனாகவும் ஆத்மாராமனாகவும் ஆத்துமானந்தனாகவும் ஆத்துமசொரூபமே நாட்டமாகவுந் தன்னைவிடவேறே யன்னிய மில்லையென்கிற நாட்டம் பொருந்தினவனாகவு மிருப்பன்—மதவகங்காரங்களில்லாதவனாகவும், சாந்தனாகவும் நிருவிகற்பனாக

வினா- அதெப்படியெனின்,

விடை- கடோபாதியினால் அடைபட்ட கடாகாசமானது கடோபாதிநீங்குகிறபோது கடாகாசமும் மகாகாசமுமொன்றானது போல சீவன்முக்தனும் பிரமத்தி லொன்றியிருப்பான்—இந்தப் பிரம நிஷ்டனானவன் மனமேகட்டுப் படாதவனாதலால் இப்போது முத்தனுமாகான் பந்தனுமல்லன் முத்தனுமாவானிந்தப்பந்தமுத்திகளிரண்டு மனதினுடைய தொழிலானபடியினால் அந்தமனதை நாசம்பண்ணினவனே பந்தமோட்சங்களை நாசம்பண்ணினவன்—இந்தமனதினுடைய பிரவிர்த்தியே புருடனுக்குப்பந்தம் இந்தமனதையான்மாவினிடத்திலயம்பண்ணுகிறதேமுத்தி ஆகலால்இந்தத் தத்துவத்தை நன்றாயறிந்து மனோ நாசவாசனையால் மனதைக்கெடுக்கிறதற்கெத்தனம் பண்ணவேணும்.

வினா- மனதென்பதேதெனின்,

விடை- ஒன்றான ஆன்மசொரூபத்தைவிட்டுப் பலவாகிய பிரபஞ்ச கற்பனைகளைக் கற்பித்தது மனது, இப்படிக் கொத்த மனதையிருத்திச் சொரூபானுபவாக்கினியினால் தகிக்கிறவனெவனோ அவனே தீரன் அவனே சூரபுருஷன் — அப்பா இந்தமனதை நாசம்பண்ணுகிற தற்குபாயம் சமாதியைத்தவிர வேறொரு சாதனமுங்காணோம் ஆதலால்சமாதியினால்சூட்சுமசரீரம் நாசமாய்ப்போகிற போதேயோகியானவன் விமுத்தனாவான்——ஆகையால்நீயும்அனுத்தமாவானதேகாதி வியாபாரங்களைவிட்டுப்பிரயத்தனம் பண்ணிச் சமாதியைச்செய்து இந்தச்சமாதியினால் மனதைக்கெடுத்துச் சீவன் முத்தனாயுநிபாமலிரு—பிராணிகளுக்குப்பிராரத்தகர்மத்தினுடைய வியல்பு ஆயாசசுகாசுகங்களைக்கூட்டுவிக்கிறதேதவிர அன்னியமாகவொருபலமுஞ்சித்தியாது ஆதலால்பிராரத்த கர்மத்துக்குச் சரீரத்தையொப்புவித்து அல்லும்பகலுஞ்சரீரசிந்தையைவிட்டு நிச்சலமாய்வெகுகாலஞ்சமாதியைச்செய்து கொண்டு ஒருவிடத்திலும் நிலைக்கடையாயிராமல் சுகமாயிரு, பிரமநிட்டரா யிருக்கிறபேர் ஒருவிடத்திலேயேவாசம் பண்ணக்கூடாது.

வினா- அதேதெனின்,

விடை- ராகத்துவேடாதிகள் வந்துகூடும் கூடினால் அதினுண்டானமோகத்தினால் அடிபட்டபட்ட மனதோடேகூடித்த

னை நிஷ்டையை மறந்து சுகசாரமாகிற பாழ்ங்கிணற்றில் இருட்டினைப் போல் விழுவன்—ஆனால் ராகத்துவேஷங்களைப் போக்கடிக்கும்படி யெத்தனம் பண்ணுகிற சற்புருஷர்கள் ராகத்துவேஷங்களுண்டாகிற விடத்தில்வாசம் பண்ணக்கூடாது ஆகையால் நன்மையாகிலுந் தீமையாகிலுமெவ்விடமெவ்விடமிருந்தாலந்த நன்மை தீமையுடையதென மொட்டாதோ எவ்விடமெவ்விடத்தில் மனதுபிரசன்னமாகுமோ அவ்விடத்தில் இருக்கவேணும்—ஜீவன்முக்தனானவன் மானங்களிலும் லாபநஷ்டங்களிலுந் தோத்திர நிந்தைகளிலும் பிரியாப்பிரியங்களிலும் நித்தியஞ் சமபுத்தியாயிருந்துக் கொண்டு சஞ்சரிப்பன்—இதுவன்றியுமொருவிடத்திலிருக்கப்புத்தி கொள்ளாமல் எவ்வளவு கிடைத்ததோ அவ்வளவில் திருப்தியடைந்தவனாய் ஞான ஐசுவரியம் பொருந்தினவனாகவும் அசங்கதினனாகவுஞ் சமதரிசியாகவுமிருப்பன்—பசிதீருகிற நிமித்தியம் போசனமும் சீதநிவிர்த்தியின் பொருட்டு வஸ்திரமும் வியாபார மொழிவதினிமித்த மவுனமும் ராகத்துவேஷங்கெடுக்கிற தத்துவசஞ்சாரமுஞ் செய்துகொண்டிருப்பன்—அப்பா! விடயங்களை அமேத்தியம்போல் தோஷமாகவிசாரிப்பதும் மோட்ச இச்சையினால் சகலதுற்சங்கங்களைவிட்டொழிகிறதும் விடயநினைப்புவாராததும் ராகத்துவேஷாதிகளில்லாதபடிக்கிருக்கிற அம்மனதினுடைய நிர்மலமுமாகியவிவையெல்லாஞ் சம்பிரஞ்ஞாதசமாதியுள்ளவனுக்கே தவிரமற்றபேர்களுக்குண்டாகமாட்டாது—மனோநிர்மலத்தின் பொருட்டு ஒடுங்கின சித்தவிருத்தியோடே கூடினவனாய் பகிர்முகவாசனை யெல்லாம் நன்றாய் விட்டொழிந்தவனாய்ச் சாந்தனாய்ச் சர்வமும்பிரமமாகக்கண்டுகொண்டு மனோமயமான நாமரூபப்பிரபஞ்சத்தோற்றத்தினையும் கானற்சலம்போல் பொய்யென்றெண்ணிச் சொரூப நிஷ்டனாய்ச் சுகமாயிரு—அப்பா! உள்ளடங்கினசமாதி நிஷ்டனுடைய ஆன்மானந்தமும் விசாலம் அவன் சஞ்சரிக்கிறதில் தேசமும் விசாலம் புண்ணியநதிகளும் விசாலம் ரட்சிக்கிறதில் தேவதாகடாட்சமும் விசாலம் சாத்திரமும் விசாலம் சொரூபானுபவமும் விசாலம்—ஆனதால் சமாதியினால் ஞானமானது நன்றாய்ப்பிறக்கும் அதினால் முத்தியோகமாகிற அழுக்கைக்கழுவப்பட்டுப் பிரமத்தைத்தவிர அன்னியமில்லாதபடி பிரமமாகவே சகலப்பிரதிபந்தகுணியனாய்ச் சுகத்திலேயிரு—தேசமென்ன பிராணனென்ன இந்திரியமென்ன மனமென்ன புத்தியென்ன அகங்காரமென்ன இதுமுதலான கிரியைகளெல்லாம் ஞானக்கினியினால் சு

சித்தாகவுமிருக்கிற சொரூபமேநானுனேன்.

இப்படி யிருக்கிறசீவன் முத்தனுனெனக்குச் சாயாரூபமாகவும் பிரதிபிம்பமாகவுந்தேகாதியுபாதிகளிருக்கட்டும் அந்தவுபாதிகளினுலுண்டான தொழில்களெல்லாஞ் சாட்சியாயுபாதியிலட்சணமான வென்னைத் தொடரமாட்டாது — ஆதலால் விதிதமாய் செய்கிறதொழிலும் நிமித்தமாய் செய்கிற தொழிலும் அவசியஞ்செய்தாலும்நான்செய்தவனல்லசொப்பனத்தில் ஒருபுருஷன் செய்த தொழில் விழித்தவுடன் சாக்கிரத்திலேபடிப்பொய்யாய்ப்போகும்மா அப்படியே ஞானசாக்கிரத்தில் சர்வமுமித்தையே — இந்தச் சராசரமான பிரபஞ்சம் ஆன்மசொரூபமாயிருக்கிற என்னுல்வியாபிக்கப்பட்டிருப்பதால் சர்வாவஸ்தைகளிலும் நான்சாட்சியாகவேயிருப்பன், இந்தத்தேகமென்பது அகங்காரத்துக்கேதவிரச்சாட்சியாயிருக்கிற வெனக்கில்லை, சுகதுக்கமும் பந்தமோட்சமுமாயிருக்கிற சமுசாரமானது இந்த அகங்காரத்துக் கென்றேயறிந்தேன் — மலமாஞ்சம்பூரிதமாயும் ஞானத்தினுல் ரட்சிக்கப்பட்டதாயும் நாய் நரிகளால் பட்சிக்கப்பட்டதாயுமிருக்கிற சரீரத்தினிடத்தில் அத்துவைதமாகியும் அகண்டமாகியுமிருக்கிற ஆனந்தபோதரூபமான நான் அகங்காரமமகாரங்களையேன்பண்ணுவேன்.

நான்வெகுகாலமாயிந்த அகங்காரமென்கிற பிசாசத்தினுல் பிடிக்கப்பட்டுசுயசொரூபமறைபட்டிருந்தேன்இப்போதிந்த அகங்காரமானசத்துருவைத்தேடித்தேடி நன்றாயறிந்து சமாதியாகிற அக்கினியில் வாசனைகளோடே கூடத்தகித்துப் போட்டேன் — சச்சிதானந்த சொரூபமாயிருந்து மயித்திரி முதிதைமுதலான குணங்களைப் பொருந்தியிருக்கிற வென்னை இத்தனைநாளு மகங்காரவாசனைகளானது வருஷாகாலத்தில் மேகமானது சூரியனைஎப்படிமறைத்ததோ அப்படி மறைத்தது இப்படிமறைத்ததே பிரத்தியகான்மாவுக்குபாதி, இந்தவுபாதியாகியவகங்காரமே பிரத்தியகான்மாவுக்கு விரோதி, இந்த அகங்காரத்தில் நின்றுனவன் விடுபடுகிறுனே அவனே முத்தனென்றும் எவனிதனிடத்தில்கட்டுப்படுகிறுனே அவனே பந்தனென்றுமறிந்தேன் — இந்தஅகங்காரபாவனையை நன்றாய் நாசம்பண்ணினுலொழிய அகண்டசச்சிதானந்தப்பிரகாசம்பிறக்கமாட்டாது ஆனதாலிந்த அகங்காரபாவத்தைச் சமாதிநிஷ்டையினுல் நாசம்பண்ணுகிறேன் — இந்தக் காமக்குரோதாதிகளான பரிவாரங்களோடேகூடி அகங்காரரூபமான சத்துருவைச்சித்ரூபமாகிற அக்கினிக்குப் பூரணகுதிகொடுத்துச் சொரூபத்

